


# குறள் வழி

## திருக்குறள் முற்றோதல் மாத மின்னிதழ்

திருவள்ளுவராண்டு 2055 சனவரி (தை)-2024 மலர்: 2 இதழ்: 1

## திருக்குறள் ஐம்பெரும் விழாவிற்கு அன்புடன் அழைக்கிறோம்



### திருக்குறள் ஐம்பெரும் விழா –2024






வள்ளுவர் குரல் குடும்பம்







**தேதி**
11-02-2024, 10:00AM - 3:00PM
ஞாயிற்றுக்கிழமை

**இடம்**
திருவள்ளுவர் அரங்கம்
Indian Officers Association(IOA),
Sri Krishnapuram Street, Royapettah,Ajantha Bus Stop,
Thiru Vi Ka High Road, Chennai - 600014





## உள்ளே..

- திருக்குறள் பரப்புரை ஆளுமை திருக்குறள் தொண்டர் பூவை. பி.தயாபரனாரின் வாழ்வும் அறப்பணிகளும்
- திருக்குறள் கற்கும் நெறிமுறைகள் முனைவர். தமிழண்ணல்
- மாவட்டத் திருக்குறள் செயல்பாடுகள்
- திருக்குறள் நூல்கள் வழங்கிய மாவட்டங்களின் விவரம்



அறம் சார்ந்த உங்கள் தொழில் செழிக்க **உங்கள் விளம்பரம் திருக்குறள் புரவலராக** இங்கு இடம்பெறலாம்


**தொடர்புக்கு**

**Email:**

Kural.Mutrothal@gmail.com

**WhatsApp:**

+91 7305571897

# “குறள் வழி” மாத இதழ்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் செய்திகளை, செயல்பாடுகளை, நிகழ்ச்சிகளை, திருக்குறள் சார்ந்த உலக முன்னெடுப்புகளை, பரப்புரைகளை தாங்கி மாதம் ஒருமுறை வரும் இதழ்.



**சனவரி 2024 மாத, “குறள் வழி” மாத இதழ் உங்கள் வாசிப்பிற்கு**

To Read as a book: https://issuu.com/kuralvazhi/docs/kuralvazhi-4

Magazine Page: https://www.valaitamil.com/literature_thirukkural_kural-vazhi/

To download as PDF:

https://drive.google.com/file/d/1HYG8_FOY_D3BzWu2szjlCCF97OyqKaE_/view

**உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுத, படைப்புகளை அனுப்ப:** kural.mutrothal@gmail.com

Facebook Page to LIKE and SHARE: https://www.facebook.com/groups/245630171535251

உங்கள் மாவட்டத்தில், உங்கள் அமைப்பில் நடைபெறும் திருக்குறள் சார்ந்த நிகழ்வுகளை எங்களுக்கு அனுப்பவும். மேலும், இவ்விதழ் குறித்த உங்கள் கருத்துகளை எங்களுக்கு எழுதி அடுத்த இதழில் வாசகர் பகுதியில் இடம்பெறச் செய்யவும்.

# உள்ளே...



# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

**அரசுப் பள்ளி மாணவர்களுக்கு 1330 திருக்குறள் இலவச மனனப் பயிற்சி**

(வெற்றிகரமாக முடிக்கும் மாணவர்களுக்குப் பயிற்சி சான்றிதழும், அரசின் முற்றோதல் திட்டத்தில் பங்கேற்க வாய்ப்பும்)

## மாவட்டப் பயிற்சியாளர்கள்

செங்கல்பட்டு

திருமதி. பி. கற்பகவள்ளி
+91 99525 73398

அரியலூர், புதுச்சேரி

திருமதி. சங்கீதா கண்ணன்
+91 78718 39331

திண்டுக்கல்

திரு. வெ.செல்வன்
+91 97884 25501

தஞ்சை

திருமதி. ச. ஆனந்தி
+91 96008 90134

காஞ்சிபுரம்

திரு. குறள் அமிழ்தன்
+91 9364 32391

காரைக்குடி

திரு. வெ.செயம்கொண்டான்
+91 9865 455036

நாமக்கல்

முனைவர். திருமலை ராஜா
+91 9952 822535

செங்கல்பட்டு

திருமதி. செ.சிந்தாமணி
+91 95976 90745

## தலைமைப் பயிற்சியாளர்கள்


திருக்குறள் தூயர்
திரு. அ. கோபி சிங்
+91 88385 11065


திரு. க. கோ. பழனி
+91 98944 59052


திருக்குறள்
திரு. க. காமராசு
+91 63802 78863


கவிஞர் தமிழ்க்குழலி
+91 99385 11065


திருக்குறள் நினைவாற்றலர்
த. தமிழ் மகிழ்நன்
+91 92802 53329

மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஆண்டுக்கு 80000 திருக்குறள் நூல்களை அடுத்த ஐந்து ஆண்டுகளுக்கு இலவசமாக வழங்குவோர்:
உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம், USA

## ஒருங்கிணைப்பாளர்கள்

திட்ட ஒருங்கிணைப்பு

திரு. ச. பார்த்தசாரதி

அரசு மற்றும் பயிற்றுநர் ஒருங்கிணைப்பு

திரு. சி. இராஜேந்திரன், IRS

அரசுப் பள்ளிகள் ஒருங்கிணைப்பு

திரு. இரவி சொக்கலிங்கம்

புரவலர் ஒருங்கிணைப்பு

Washington DC, USA

இந்தியா

திரு. செந்தில் துரைசாமி
Texas,USA

## பயிற்சி விவரங்களுக்கு

E-Mail: kural.mutrothal@gmail.com
Web: www.Thirukkural.ValaiTamil.com
WhatsApp: +91 73586 44673

முற்றோதல் முடித்தவர்கள் பதிவு செய்ய
www.ValaiTamil.com/mutrothal-students-register.php



மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள் கீழ்காணும் பதாகையை உங்கள் அமைப்பின் இலச்சினை (Logo) அல்லது பெயர் போட்டு வடிவமைத்து உங்கள் மாவட்ட நிகழ்ச்சிகளில். பயன்படுத்தவும்.



உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்

உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம்

இணைந்து வழங்கும்

**அரசுப்பள்ளி மாணவர்களுக்கு**
**இலவசத் திருக்குறள் நூல்கள் வழங்கி,**
**முற்றோதல் பயிற்சி தொடக்க விழா**






Scan QR Code
To Read Books

# ஆசிரியர் பக்கம்

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் தொடங்கப்பட்டு இரண்டாவது ஆண்டு நிகழ்வு மிகச்சிறப்பாக ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இது வழக்கமான மேடை நிகழ்வாக இல்லாமல் ஐந்து முக்கிய செயல்பாடுகள் சார்ந்த நிகழ்வாகத் திட்டமிடப்பட்டுள்ளது.

ஒவ்வொரு ஆண்டும் சனவரி மாதம் திட்டமிடப்படும் இந்த மாநில திருக்குறள் முற்றோதல் இயக்க சந்திப்பு இவ்வாண்டு அமெரிக்கா, டென்மார்க், மியான்மர் உள்ளிட்ட பலரின் பங்கேற்றலை ஒட்டி பிப்ரவரி 11 அன்று திட்டமிடப்பட்டுள்ளது. இதில் "நவில்தொறும் நூல்நயம்" பொன்விழா நிகழ்வு, தமிழ்நாட்டின் பல பகுதிகளில் தனித்து திருக்குறள் பரப்புரையில் ஈடுபடும் அனைவரையும் ஒரே இடத்தில் சந்தித்து, நட்பு பாராட்டி, திருக்குறள் செயல்பாடுகள், பரப்புரை திட்டங்களைப் பகிர்ந்துகொண்டு, புதிய சிந்தனைகளை உள்வாங்கி, ஆலோசனைகளைப் பகிர்ந்துகொண்டு செல்ல ஒரு தளமாக இந்த ஆண்டுவிழா நிகழ்வைப் பயன்படுத்தலாம்.

பல புதிய மாவட்டங்களில் தொடர்ந்து புதிய பயிற்சியாளர்கள், ஒருங்கிணைப்பாளர்களை அடையாளம் கண்டு திருக்குறள் முற்றோதல் பயிற்சியை வழங்க முயல்கிறோம். அவர்கள் நம் தலைமைப் பயிற்சியாளர்களுடன் உரையாடித் தெளிவு பெற, ஆலோசனை பெற இந்த நேரடி சந்திப்பு வாய்ப்பாக அமையும்.

முற்றோதல் முடித்தவர்களை ஆவணப்படுத்தி வெளியிடல், குறள் வழி மாத இதழ், முற்றோதல் ஆசிரியர் பயிற்சி உள்ளிட்ட பல துறைகள் அவரவர் குழுவின் பொறுப்பைச் செய்கிறார்கள். அனைவரும் ஒரே இடத்தில் அமர்ந்து ஒருவருக்கொருவர் புரிந்துகொள்ள இந்த சந்திப்பு வாய்ப்பாக இருக்கும்.

திருக்குறள் ஆர்வலர்கள், மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்கள், புரவலர்கள் என்று அனைவரும் நேரில் கலந்துகொள்ள அன்புடன் அழைக்கிறோம்.

2024 ஆம் ஆண்டின் முதல் இதழாக வருவதால் புத்தாண்டில் நம் வாழ்த்தில் தெரிவித்தவற்றையே மீண்டும் குறிப்பிட விரும்புகிறேன்.

## 2023 இலக்குகள்: (வெற்றிகரமாக நாம் கடந்துவந்துள்ளோம்)

- மாவட்டத் தொடர்பாளர்களைக் கண்டறிந்து திருக்குறள் நூல்கள் கொண்டுசேர்த்தல்.
- மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், புரவலர்களை அடையாளம் கண்டு சேவையைத் துவங்குதல்.
- குறள் வழி நூலை மின்னூல், அச்சு என்று இரு படிகளாக கொண்டுவருதல்.
- அரசுத்துறையுடன், அரசுப்பள்ளிகளுடன் மாவட்ட அளவில் நட்புறவை உருவாக்குதல்.
- மாவட்ட அளவில் ஒருங்கிணைப்புக்குழு, அரசுப்பள்ளி ஆசிரியர்கள் குழுக்களை உருவாக்கி முறைப்படுத்துதல்.
- பயிற்சியாளர்கள், மாவட்ட ஒருங்கிணைப்பாளர், புரவலர்களுக்கு வழிகாட்டுதல், புரிந்துணர்வு கையேட்டை உருவாக்குதல்.

- தொழில்நுட்பக் கட்டமைப்பை ஏற்படுத்தி மாணவர்கள் பயிற்சிப் பதிவு, பள்ளிகள் திருக்குறள் நூல் பதிவு ஆகியவற்றை இணையத்தில் கொண்டுவருதல்.
- அரசுடன் இணைந்து மாவட்ட நிகழ்ச்சிகளை நடத்தி நூல்களை வழங்குதல்.

## 2024 இலக்குகள்:

- **மாவட்டங்களில் பயிற்சிகளை விரிவாக்குதல். மாவட்டத்திற்கு 100 மாணவர்கள் முற்றோதல் பயிற்றுவிக்கும் இலக்கை நோக்கி நகர்தல்.**
- **தமிழ்நாடு அளவில் 124 என்ற தற்போதைய எண்ணிக்கையை குறைந்தது 1000ஆக உயர்த்துதல்.**
- **குறள் வழி இதழை நிலைநிறுத்தி, பதிவு செய்தல்.**
- **மாவட்ட அளவில் புரவலர், பயிற்சியாளரை விரிவாக்குதல்.**
- **தொய்வு உள்ள 9 மாவட்டங்களில் அதிக கவனம் செலுத்தி பலப்படுத்துதல்.**
- **முற்றோதல் ஆசிரியர் பயிற்சிக் கட்டமைப்பு உருவாக்குதல், பயிற்சியை தரப்படுத்தல்.**
- **25 ஆண்டுகால 1200+ முற்றோதல் முடித்தவர்களை தொகுத்து மாவட்டம், பயிற்சியாளர், நாடு வாரியாக இணையத்தில் வெளியிடுதல்.**
- **முற்றோதல் முடித்தவர்களுக்கு அதிக வாய்ப்புகளை ஏற்படுத்தி முன்னுரிமை அளித்தல்.**
- **மாவட்ட அளவில் 2024 இறுதியில் திருவள்ளுவர் நாளில் மாவட்ட அளவில் குழுவாக முற்றோதல் செய்யவைத்தல்.**
- **திருக்குறள் ஆளுமைகளைத் தொகுத்து வெளியிடுதல்.**
- **25 ஆண்டுகளாக முடித்தவர்களுக்கு முற்றோதல் இளநிலை சான்றிதழ் வழங்குதல்.**
- **முற்றோதல்-முதுநிலை நேர்முகத் தேர்வுக்கு பாடத்திட்டம் வரையறை செய்து பயிற்சிக் கையேடு வெளியிடுதல்.**
- **மாவட்ட அளவில் திருக்குறள் சார்ந்த ஆளுமைகள், ஆர்வலர்களை மாவட்டக் குழுவில் சேர்த்தல். அனைவரும் ஒருங்கிணைந்து**
- **குழுவாக கைகோர்த்து செயல்படுதல்.**

திட்ட ஒருங்கிணைப்பாளர்,

**வலைத்தமிழ் ச.பார்த்தசாரதி**



## உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் - என்ன செய்கிறது?

உலகப் பொதுமுறையாம் திருக்குறளை இளம் வயதிலேயே மாணவ மாணவியர் மனப்பாடம் செய்தால் வாழ்நாள் முழுவதும் மனத்தில் நிற்கும். "இளமையில் கல்வி பசுமரத்தாணி" என்பது பழமொழி.

திருக்குறள் மனித இனத்தின், குறிப்பாக தமிழர்களின் மாபெரும் பொதுவுடைமைச் சொத்து. திருக்குறள் நெறிகள் பரவப்பரவ, அறம் பரவும். தமிழ் மொழிப்பயிற்சியும், மாணவர்களுக்குக் கிடைக்கும். அறமும், மொழியும் வளரும். மேலும் அறமும், திறனும், ஒருங்கே வாய்ந்த இளைஞர் சமுதாயம் உருவாகிட வலுவான அடித்தளமாக திருக்குறள் மனனம் அமையும். சமுதாயத்தில் நல்லிணக்கமும், மனித நேயமும் வளரும்.

திருக்குறள் பொருள் பொதிந்த, பொருள் நிறைந்த, இகலில்லா இன்ப வாழ்க்கையின் கையேடு. கிட்டத்தட்ட 20 ஆண்டுகளுக்கும் மேலாக, 1330 திருக்குறளையும் மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் மாணவ மாணவியரை ஊக்குவிக்கும் வகையில் தமிழக அரசு சான்றிதழ் மற்றும் பரிசுத் தொகை வழங்கி வருகிறது. திருக்குறள் முற்றோதல் செய்யும் 70 மாணவர்களுக்கு, 2021 ஆம் வருடம் வரை, தலா ரூ.10000/- திருவள்ளுவர் தினத்தன்று அரசு வழங்கி வந்தது.

இந்த சூழ்நிலையில் தமிழக அரசு 2022 ஆம் ஆண்டு சட்டசபையில் 70 மாணவர்கள் என்ற உச்சவரம்பை நீக்கியது.பரிசுத்தொகையும் உயர்த்தப்படும் என்று மாண்புமிகு தமிழ் வளர்ச்சித் துறை அமைச்சர் சட்டசபையில் அறிவித்தார். {தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித் துறை. தமிழ் வளர்ச்சி மானியக் கோரிக்கை - 46 அறிவிப்புகள் (2021-2022)}. கடந்த 20 ஆண்டுகளுக்கும் மேலாக இதுவரை ஆண்டுதோறும் பரிசு பெறும் மாணவர்களின் வயதைப் பார்த்தால் 95 விழுக்காடு மாணவ/மாணவியர் 14 வயதுக்குட்பட்டே இருக்கிறார்கள். ஆறு/ஏழாம் வகுப்புக்குள் மனனம் செய்துவிட்டால், பிறகு மேல் வகுப்புகளில் பொருளுணர்ந்து படிக்க ஏதுவாக இருக்கும். தனிவாழ்வில் நிறைவான வாழ்க்கை வாழவும், சமுதாய பிரச்சனைகளை திருக்குறள் துணையுடன் எதிர் கொள்ளவும், இளவயதிலேயே 1330 அருங்குறள் மனனம் பயனுள்ளதாக இருக்கும்.

இந்தப் பின்புலத்தில், வலைத்தமிழ், வள்ளுவர் குரல் குடும்பம், சர்வீஸ் டு சொசைட்டி என்ற மூன்று அமைப்புகளும் இணைந்து, தமிழ்நாடு, புதுச்சேரியில் ஏற்கனவே திருக்குறள் முற்றோதல் பயிற்சியளிக்கும் ஆசிரியர்களை ஒருங்கிணைத்து, ஒவ்வொரு மாவட்டத்திற்கும் ஒரு ஒருங்கிணைப்பாளர், ஒரு பயிற்சியாளர், ஒரு புரவலர் அடையாளம் கண்டு அக்டோபர் 2021ல் தொடங்கப்பட்டது இவ்வியக்கம். எம்முடன் உலகத் தமிழ்வளர்ச்சி மன்றம், USA இணைந்து ஒரு மாவட்டத்திற்கு 2000 திருக்குறள் நூல்கள் வீதம் ஒரு ஆண்டுக்கு 80, 000 திருக்குறள் நூல்களையும், ஐந்து ஆண்டுகளுக்கு மொத்தம் 4 லட்சம் நூல்களையும் அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக வழங்க முன்வந்தது.

### உங்கள் மாவட்ட திருக்குறள் பரப்புரை தேவைகளுக்கு பொறுப்பேற்க திருக்குறள் புரவலர்களை அழைக்கிறோம்.

*உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. ஒவ்வொரு மாவட்டத்திலும் அந்த மாவட்டத்தை சார்ந்த திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர் ஒருவரை அடையாளம் கண்டு அல்லது உருவாக்கி பகுதிநேர-முழுநேர திருக்குறள் பயிற்சி வழங்க ஊக்கத்தொகை, மாணவர்களுக்கு சான்றிதழ் அச்சடித்தல், "குறள் வழி" இதழுக்கு விளம்பரம் கொடுத்து இலவச இதழ்களை அனுப்ப உதவுதல் என்று சுயமாக உங்கள் மாவட்டத்தில் பொறுப்பேற்க அழைக்கிறோம். ஊர் கூடி பயணிக்கும் திருக்குறள் தேரை இழுக்க வடம் பிடிக்க வாருங்கள். எமக்கு அறம் சார்ந்த வணிகர்கள் அவர்கள் தொழில்களை விளம்பரம் செய்து உங்கள் மாவட்டத்தில் திருக்குறள் பரப்புரைக்கு உதவலாம்.*




# உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் குறிக்கோள்கள்

**1.** தமிழ்நாடு அரசின் புதிய அறிவிப்பைத் தொடர்ந்து, **1330** திருக்குறளையும் மனனம் செய்யும் மாணவர்களை அதிக அளவில் உருவாக்கி, அரசு விருதும், பரிசுத்தொகையும் பேரவைப்பது. திருக்குறள் வழியில் அறம் சார்ந்த முன்மாதிரி தமிழ்ச் சமூகத்தை கட்டமைத்தல்.

**2.** பள்ளித் தலைமை ஆசிரியர்கள்/ஆசிரியர்கள், பெற்றோர்களுடன் இணைந்து செயல்பட்டு ஆர்வமும் மனனம் செய்யும் திறனும் மிக்க மாணவர்களை இனம் கண்டு, அவர்களுக்குத் திருக்குறள் முற்றோதல் மனனப் பயிற்சியை **9**-ஆம் வகுப்புக்குள் அளித்தல். அவர்களுக்கு அரசு விருது மட்டுமின்றி உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் "திருக்குறள் முற்றோதல்-இளநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**3.** வயதுக்கு ஏற்ப, முற்றோதல் முடித்த அனைவரும் கல்லூரி செல்வதற்கு முன்பு முழுமையாக குறளின் பொருளை அறிந்துகொள்ள வழிசெய்தல். அதில் நேர்முகத் தேர்வு வைத்து பொருள் உணர்ந்து கற்றறிந்தவர்களுக்கு "திருக்குறள் முற்றோதல்-முதுநிலை" சான்றிதழ் வழங்குதல்.

**4.** திருக்குறள் முற்றோதல் பயிற்றுவிக்க தமிழ்நாட்டின் அனைத்து மாவட்டங்களிலும் தகுதியான அனுபவமும் ஆர்வமும் மிக்க முற்றோதல் முடித்த பயிற்சியாளர்களை அடையாளம் கண்டு பயிற்சியாளராகவும், அந்த பயிற்சியாளருக்கு மாதம் ஒரு ஊக்கத்தொகை வழங்க ஒரு புரவலரையும், மாவட்ட ஒருங்கிணைப்பு செய்ய ஒரு ஒருங்கிணைப்பாளரையும் நியமித்தல்.

**5.** தமிழ்நாடு மற்றும் புதுவையில் பள்ளி, கல்லூரி உள்ளிட்ட கல்விக்கூடங்களில் திருக்குறள் சிலை நிறுவவும், மாநிலம் முழுதும் ஒவ்வொரு ஊரிலும் ஒரு திருவள்ளுவர் சிலை வைத்து திருக்குறள் மறையோதல் செய்து வாழ்வியல் கருத்துகளை உள்வாங்கி வாழ்க்கையை முன்னுதாரணமாக திருக்குறள் வழியில் அமைத்துக்கொள்ள அரசுகளுடன், அமைப்புகளுடன் உரையாடி உரிய வழிவகை செய்வது. ஒவ்வொரு ஆண்டும் திருவள்ளுவர் நாளில், திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள் அனைவரும் அந்தந்த மாவட்டத்தில் உள்ள ஒரு குறிப்பிட்ட திருவள்ளுவர் சிலையின் முன் ஒன்றுகூடி, தமிழ் வளர்ச்சித்துறை, மாவட்ட நிர்வாகம் ஆகியவற்றுடன் இணைந்து குழுவாக "திருக்குறள் முற்றோதல்" செய்து, கற்றதை மறந்துவிடாமல் இருக்க வழிசெய்தல்.

**6.** குறள் முற்றோதல் முடித்த அனைவரின் விவரங்களையும் இணையத்தில் பட்டியலிட்டு, வரிசை எண் கொடுத்து அவர்கள் ஒருங்கிணைந்த வளர்ச்சியை, வெற்றியைப் பெற துணைநிற்றல்.

**7.** குறள் முற்றோதல் முடித்த அனைவரும் ஒருவருக்கொருவர் துணை நின்று கல்வி, வேலைவாய்ப்பு, மகிழ்ச்சியான, நிறைவான வாழ்க்கையை வாழவும், வேலைவாய்ப்பில், தொழிலில் வெற்றிபெறவும் முன்னுரிமை கொடுத்து அவர்களுக்கு உரிய உதவிகளைப் பெற துணைநிற்றல்.

**8.** திருக்குறள் முற்றோதல் முடித்த மாணவர்களுக்கு அரசு வேலைவாய்ப்பில் **5%** முன்னுரிமை வழங்க கோரிக்கை வைத்து முயற்சி மேற்கொள்ளப்படும்.

**9.** அனைத்து பள்ளிகளிலும் காலையில் திருக்குறள் மறையோதி தொடங்க அரசுக்கு பரிந்துரைப்பது. அனைத்து தமிழ் நிகழ்வுகளிலும் திருக்குறள் போற்றி பாடி, திருக்குறள் மறையோதி நிகழ்ச்சியைத் தொடங்குவதை நடைமுறையில் கொண்டுவர முயற்சிக்கப்படும்.

**10.** இதுவரை வெளிவந்துள்ள திருக்குறள் மொழிபெயர்ப்புகள், உரைநூல்கள் மட்டுமல்லாது, திருக்குறள் சார்ந்த அனைத்து விதமான நூல்களையும் தொகுத்து "உலகத் திருக்குறள் ஆராய்ச்சி நூலகம்" ஒன்றை உருவாக்கி, உலகின் திருக்குறள் நூல் என்றால் அங்கு இருக்கும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தும் வகையில், தொழில்நுட்பம், தற்சார்பு நிலையை ஏற்படுத்தி நிறுவ முயற்சி மேற்கொள்ளப்படும்.

www.Thirukkural.ValaiTamil.com | Kural.Mutrothal@gmail.com |



## திருக்குறள் முற்றோதல் பயிற்சி தொடக்க விழா - மறுபதிவு..

பள்ளிக் கல்வித்துறை மற்றும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் இணைந்து நடத்தும் பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கி முற்றோதல் பயிற்சி தொடக்கவிழா, தி.நகர், சென்னை, ஹோலி ஏஞ்சல் ஆங்கிலோ இந்தியன் மேல்நிலைப்பள்ளியில் இன்று (05.12.2022) காலை 9:30 மணிக்கு நடைபெற்றது.

திருக்குறள் நூல்களை இவ்வாண்டு, முதல் மாவட்டமாக சென்னைக்கு வழங்கி **மாண்புமிகு கல்வியமைச்சர் திரு.அன்பில் மகேஷ் பொய்யாமொழி** அவர்கள் 05-12-2022 (திங்கள்கிழமை) அன்று தொடங்கிவைத்து சிறப்புரையாற்றினார்.





# நன்றி... நன்றி... நன்றி...



**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்துடன் இணைந்து, தமிழ்நாட்டு அரசுப்பள்ளி மாணவர்களுக்கு இலவசமாக திருக்குறள் நூல்களை வழங்கும் தமிழிருக்கை குழுமத்தின் இயக்குநர், உலகத் தமிழ்வளர்ச்சி மன்ற ஒருங்கிணைப்பாளர் மருத்துவர் விஜய் ஜானகிராமன் அவர்களுக்கும், அவருடன் துணைநிற்கும் அனைத்து புரவலர்களுக்கும் நன்றி...**

## திருக்குறள் ஐம்பெரும் விழாவிற்கு அன்புடன் அழைக்கிறோம்..



# திருக்குறள் ஐம்பெரும் விழா –2024



வள்ளுவர் குரல் குடும்பம்




**தேதி**
11-02-2024, 10:00AM - 3:00PM
ஞாயிற்றுக்கிழமை

**இடம்**
திருவள்ளுவர் அரங்கம்
Indian Officers Association(IOA),
Sri Krishnapuram Street, Royapettah,Ajantha Bus Stop,
Thiru Vi Ka High Road, Chennai - 600014



### 1. ஆங்கில நூல் வெளியீடு : Thirukkural Translations in World Languages

**வெளியிடுபவர்**



மாண்பமை நீதியரசர்.
**அரங்க. மகாதேவன்**

**பெறுபவர்கள்**



முனைவர்
ஔவை அருள்
இயக்குநர், தமிழ் வளர்ச்சித்துறை



முனைவர்
சி.சுப்பிரமணியம்
மேனாள் துணைவேந்தர்



கலைமாமணி
டாக்டர். வி.ஜி.சந்தோசம்
வி.ஜி.பி. உலகத் தமிழ்ச்சங்கம்




### 2. உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை, சிகாகோ, தமிழ்ப்பண்பாட்டுக் கையேடு, திருக்குறள் நூல், 3ஆம் பதிப்பு வெளியீடு (தங்கப் பதிப்பு)

**நூல் அறிமுகம்**



பேராசிரியர் முனைவர். இ.சுந்தரமூர்த்தி
துணைத்தலைவர்,
செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்



திருமதி. மீனாட்சி ராம்மோகன்
இயக்குநர், உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை

**ஒருங்கிணைப்பு**



திரு. மணி மணிவண்ணன்
திருக்குறள் நூல் வடிவமைப்புக்குழு



முனைவர். ஆயி கவுண்டன்
இணை இயக்குனர்,
உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை




### 3. "நவில்தொறும் நூல்நயம்"– பொன்விழா வாரம்

**தலைமையுரை**



பேராசிரியர் இ சுந்தரமூர்த்தி,
துணைத் தலைவர், செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனம்

**"வள்ளுவம்" நூல் குறித்து சிறப்புரை**



பேராசிரியர் அரங்க இராமலிங்கம்
மேனாள் தலைவர், தமிழ்த் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்



YouTube

50 வாரக் காணொளிகள்

நிகழ்ச்சியைத் திட்டமிட முன்பதிவு அவசியம்: முன்பதிவு செய்ய www.GlobalTamilEvents.com GlobalTamilEvents www.globaltamilevents.com +91 73055 71897

LIVE at www.ValaiTamil.TV or www.YouTube.com/ValaiTamil or www.FB.com/ValaiTamil

# திருக்குறள் ஐம்பெரும் விழா –2024




வள்ளுவர் குரல் குடும்பம்



**தேதி**
11-02-2024, 10:00AM - 3:00PM
ஞாயிற்றுக்கிழமை

**இடம்**
திருவள்ளுவர் அரங்கம்
Indian Officers Association(IOA),
Sri Krishnapuram Street, Royapettah,Ajantha Bus Stop,
Thiru Vi Ka High Road, Chennai - 600014



## 4. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் – இரண்டாம் ஆண்டு விழா

செயல்திட்ட விளக்கம், மாவட்டத் தொடர்பாளர்கள் அறிமுகம், பயிற்சியாளர்களுக்குப் பாராட்டு, புரவலர்களுக்கு நன்றி கூறல், அடுத்தக்கட்டத் திட்டமிடுதல்.

**தலைமையுரை**
**குறள் வழி இதழ் வெளியீடு**

**ஒருங்கிணைப்பு**


மருத்துவர். விஜய் ஜானகிராமன்
உலகத் தமிழ் வளர்ச்சி மன்றம்,
அமெரிக்கா, திருக்குறள் நூல் புரவலர்


வலைத்தமிழ் திரு. ச.பார்த்தசாரதி


திரு. சி.இராஜேந்திரன் IRS(Rtd.)


திரு. இரவி சொக்கலிங்கம்



- கடந்த 25 ஆண்டுகளில் திருக்குறள் முற்றோதல் முடித்த 1100+ பேரின் விவரங்களை தொகுத்து வெளியிட இணையதளம்
- முற்றோதல் பயிற்சியாளர் பயிற்சிக் கையேடு
- இலவசமாக வழங்கப்பட்ட 40000 திருக்குறள் நூல்கள் குறித்த கள அனுபவம்.
- திருக்குறள் முற்றோதல் பயிற்சிக்கு முழுநேர–பகுதிநேர பயிற்சியாளர்கள் தேவையும், திட்டமும்
- திருக்குறள் பரவலாக்கல் வாய்ப்புகள்

## 5. திருக்குறள் புதிய மொழிபெயர்ப்புகள் அறிமுகம் : டேனிஷ் உள்ளிட்ட மொழிபெயர்ப்புகள்

**நூல்கள் அறிமுகம்**


திரு. கஜேந்திரன் நாகலிங்கம்
டென்மார்க்




நிகழ்ச்சியைத் திட்டமிட முன்பதிவு அவசியம்: முன்பதிவு செய்ய www.GlobalTamilEvents.com  +91 73055 71897

LIVE at www.ValaiTamil.TV or www.YouTube.com/ValaiTamil or www.FB.com/ValaiTamil




# திருக்குறள் ஐம்பெரும் விழா –2024










**தேதி**
11-02-2024, 10:00AM - 3:00PM
ஞாயிற்றுக்கிழமை

**இடம்**
திருவள்ளுவர் அரங்கம்
Indian Officers Association(IOA),
Sri Krishnapuram Street, Royapettah,Ajantha Bus Stop,
Thiru Vi Ka High Road, Chennai - 600014



## திருக்குறள் முற்றோதல், பரவலாக்கத்தில் பங்கேற்கும், துணைநிற்கும் அமைப்புகள்

### திருக்குறள் அமைப்புகள்

**திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,**
தஞ்சாவூர் மாவட்டம்
**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்,**
நாமக்கல் மாவட்டம்
**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்,**
புதுவை
**திண்டிவனம் தமிழ்ச் சங்கம்,**
விழுப்புரம் மாவட்டம்
**குறளகம்,**
கன்னியாகுமரி மாவட்டம்
**திருவள்ளுவர் கழகம்,**
தென்காசி மாவட்டம்
**குறள் நெறிப் பயிலகம்,**
புதுக்கோட்டை மாவட்டம்
**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்,**
அரியலூர் மாவட்டம்
**திருவள்ளுவர் படிப்பகம்,**
கிருஷ்ணகிரி மாவட்டம்
**ஐயன் திருவள்ளுவர் படிப்பகம்,**
திருப்பூர் மாவட்டம்
**உலகப் பொதுமறை திருக்குறள் பேரவை,**
காஞ்சிபுரம் மாவட்டம்
**திருக்குறள் மன்றம்,**
திருப்படித்துூர் மாவட்டம்.
**திருவள்ளுவர் மன்றம் & வையைத் தமிழ்ச்சங்கம்,**
தேனி மாவட்டம்
**வள்ளுவர் பேரவை,**
சிவகங்கை மாவட்டம்
**திருக்குறள் தமிழ்ப்பேரவை,**
ராணிப்பேட்டை மாவட்டம்
**உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம்,**
நாகப்பட்டினம் மாவட்டம்
**திருக்குறள் பேரவை,**
மயிலாடுதுறை மாவட்டம்
**திருவள்ளுவர் கல்வி மன்றம்,**
சென்னை மாவட்டம்
**புதுவை தமிழ்ச்சங்கம்,**
புதுச்சேரி

**உலகத் திருக்குறள் பேரவை,**
கடலூர் மாவட்டம்
**திருக்குறள் நடுவம்,**
கள்ளக்குறிச்சி மாவட்டம்
**திருக்குறள் முற்றோதல் மையம்,**
திருவண்ணாமலை மாவட்டம்
**திருவள்ளுவர் வாழ்வியல் மன்றம்,**
திண்டுக்கல் மாவட்டம்
**குறளகம்,**
மதுரை மாவட்டம்
**திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,**
மதுரை மாவட்டம்
**திருவள்ளுவர் சேவா சங்கம்,**
வேலூர் மாவட்டம்
**திருக்குறள் கவனகர் இரா. எல்லப்பன் நினைவாற்றல் பயிலகம்,**
செங்கல்பட்டு மாவட்டம்
**திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,**
தூத்துக்குடி மாவட்டம்
**வாணியம்பாடி திருக்குறள் மன்றம்,**
திருப்பத்தூர் மாவட்டம்
**திருவள்ளுவர் படிப்பகம்,**
திருநெல்வேலி மாவட்டம்
**திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை,**
திருச்சி மாவட்டம்
**திருக்குறள் முத்தமிழ் மன்றப்பாடச்சாலை,**
திருவள்ளூர் மாவட்டம்
**மயிலாடுதுறை தமிழ்ச்சங்கம்,**
மயிலாடுதுறை மாவட்டம்
**திருவள்ளுவர் ஞான மன்றம்,**
அரியலூர் மாவட்டம்
**திருக்குறள் முற்றோதல் பயிற்றகம்,**
நீலகிரி மாவட்டம்
**உலகத் திருக்குறள் பேரவை,**
ஈரோடு மாவட்டம்
**திருவள்ளுவர் படிப்பகம்,**
தென்காசி மாவட்டம்

### பிற ஆதரவு அமைப்புகள்

**ஜெனிஃபர் இனிப்பகம் & அடுமனை,**
மயிலாடுதுறை மாவட்டம்
**பசியில்லா தர்மபுரி,**
தர்மபுரி மாவட்டம்

**வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரி,**
கரூர் மாவட்டம்

**திருக்குறள் களப்பணியில் ஈடுபடும் அமைப்புகளை நிகழ்ச்சியில் கலந்துகொள்ள அன்போடு அழைக்கிறோம்.**

**மதிய உணவு, தேநீர் வழங்கப்படும்**

நிகழ்ச்சியைத் திட்டமிட முன்பதிவு அவசியம்: முன்பதிவு செய்ய www.GlobalTamilEvents.com




+91 73055 71897

**LIVE** at www.ValaiTamil.TV or www.YouTube.com/ValaiTamil or www.FB.com/ValaiTamil

அனைவருக்கும் வணக்கம்,

திருக்குறள் ஐம்பெரும் விழா *-2024* வரும் பிப்ரவரி *11* அன்று முழுநாள் நிகழ்வாக திட்டமிடப்பட்டுள்ளது. அனைவரும் வருக..

1. *"Thirukkural Translations in World Languages"* நூல் வெளியீடு
2. "நவில்தொறும் நூல்நயம்" பொன்விழா வாரம்
3. உலகத் தமிழ்மொழி அறக்கட்டளை, சிகாகோ அமெரிக்கா, தமிழ்ப்பண்பாட்டுக் கையேடு திருக்குறள் நூல் மூன்றாம் பதிப்பு வெளியீடு.
4. உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் இரண்டாம் ஆண்டு விழா - சந்திப்பு
5. உலக அளவில் புதிதாக வெளிவந்த திருக்குறள் மொழிபெயர்ப்பு நூல்கள் அறிமுகம்

தங்கள் வருகையை பதிவு செய்வது நிகழ்ச்சியை திட்டமிட வசதியாக இருக்கும். உங்களுக்குத் தெரிந்த திருக்குறள் ஆர்வலர்கள், அமைப்புகளுக்கு பகிரவும்.

பதிவு செய்ய : *https://www.globaltamilevents.com/thirukkural-vizha-2024-tview1223.html*



திருக்குறள் மந்திரங்கள் - 108 போற்றி அகவல் || இயற்றி...

திருக்குறள் மந்திரங்கள் - 108 போற்றி அகவல்

இயற்றியவர்

புலவர் இரா. இளங்குமரனார்

www.ValaiTamil.com

0:00 / 8:18

Scroll for details

# திருவண்ணாமலை வட்டம்

6.12.2023 அன்று திருவண்ணாமலை மாவட்டம் ஆலூர் அரசினர் மேல்நிலைப்பள்ளி மாணவ மாணவியற்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.



19.12 2023 அன்று திருவண்ணாமலை மாவட்டம் அடி அண்ணாமலை அரசினர் உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.



19.12.2023 அன்று திருவண்ணாமலை மாவட்டம் அடி அண்ணாமலை ஊராட்சி ஒன்றியநடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.




## கன்னியாகுமரி மாவட்டம்

08.12.2023 அன்று கன்னியாகுமரி மாவட்டம் எழகரம் அரசு உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு திரு.தமிழ்க்குழவி அவர்கள் திருக்குறள் நூல்களை வழங்கினார்.



# திண்டுக்கல் மாவட்டம்

8.12.2023 அன்று திண்டுக்கல் மாவட்டம் உலக திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பாக பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல் வழங்கும் நிகழச்சி மாவட்ட ஆட்சி தலைவர் மற்றும் தமிழ் வளர்ச்சி துறை இயக்குனர்கள் முன்னிலையில் வழங்கப்பட்டன.



திண்டுக்கல் மாவட்ட ஆட்சியர் அலுவலக கூட்டரங்கில் இன்று(08.12.2023) நடைபெற்ற அரசு அலுவலர்கள் மற்றும் பணியாளர்களுக்கான ஆட்சிமொழிப் பயிலரங்கம், கருத்தரங்கில், மாவட்ட வருவாய் அலுவலர் திரு.சே.ஹா.சேக்முகையதீன் அவர்கள் தலைமை வகித்து, ஜவகர்லால் நேரு பிறந்தநாளை முன்னிட்டு பள்ளி மற்றும் கல்லூரி மாணவிகளுக்கு நடைபெற்ற பேச்சுப் போட்டியில் வெற்றி பெற்ற மாணவ, மாணவிகளுக்கு பரிசுத்தொகை மற்றும் பாராட்டுச்சான்றிதழ்களை வழங்கினார். அருகில் இந்நிகழ்ச்சியில் தமிழ் வளர்ச்சி உதவி இயக்குநர்(மு.கூ.பொ.) திரு.பெ.இளங்கோ, மேனாள் தமிழ் வளர்ச்சித் துணை இயக்குநர்(ம) மதுரை உலகத்தமிழ்ச் சங்க இயக்குநர்(பொ) முனைவர் பெ.சந்திரா உட்பட பலர் உள்ளனர்.

22.12.2023 அன்று திண்டுக்கல் மாவட்டம் தேவத்தூர் அரசு ஆரம்பப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.



# நாமக்கல் மாவட்டம்

9.12.2023 நாமக்கல் மாவட்டம் அரசு உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.



# வேலூர் மாவட்டம்

11.12.2023 அன்று வேலூர் மாவட்டம் கொசப்பேட்டை மாநகராட்சி தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.






# பெரம்பலூர் மாவட்டம்

13.12.2023 அன்று பெரம்பலூர் மாவட்டம் கவுள் பாளையம் ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.















## விழுப்புரம் மாவட்டம்

16.12.2023 அன்று விழுப்புரம் மாவட்டம் மயிலம் ஊராட்சி ஒன்றிய தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.




## அரியலூர் மாவட்டம்

19.12.2023 அன்று அரியலூர் மாவட்டம் பள்ள கிருஷ்ணாபுரம் ஊராட்சி ஒன்றிய நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன



# காஞ்சிபுரம் மாவட்டம்

**20.12.2023** அன்று காஞ்சிபுரம் மாவட்ட ஆட்சியர் அலுவலகத்தில் நடைபெற்ற அரசு பணியாளர் பயிலரங்கு நிகல்வின் போது திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் 16 அரசு பள்ளிகளுக்கு திருக்குறள் நூல்களை தமிழ் வளர்ச்சி துறை துணை இயக்குனர் திருமதி. க.பவானி அவர்கள் வழங்கினார்.



**22.12.2023** அன்று காஞ்சிபுரம் மாவட்டம் கே.வி.கே.நாயகர் நடுநிலைப்பள்ளி மாணவர்களுக்கு திருக்குறள் நூல்கள் வழங்கப்பட்டன.



# திருக்குறள் பரப்புரை ஆளுமை

## திருக்குறள் தொண்டர்

### பூவை. பி.தயாபரனாரின் வாழ்வும் அறப்பணிகளும்



தமிழால் தமிழுக்காகவும் திருக்குறளால் திருக்குறளுக்காகவும் வாழ்ந்து அறப்பணிகள் ஆற்றிவரும் பெருமகனார்தான், திருச்சி மாவட்டம், திருத்தவத்துறை என்னும் இலால்குடியை அடுத்த பூவாளூர் என்னும் ஊரில் பிறந்து (24.01.1952) இப்போது புள்ளம்பாடியில் வாழ்ந்து வருகின்ற தயாபரனார் அவர்கள்.

ஆளாளுக்கு ஓர் ஆசை உண்டு. இவருக்கும் இவர்தம் குடும்பத்தார்க்கும் திருக்குறளைப் பரப்புவதில் மிகுந்த ஆசை. அத்தோடு அறப்பணிகள் செய்வதில் இவருக்கு மிகுந்த ஆசை.

**இளமையிலேயே உள்ளத்தில் ஊறிய தமிழ்**

இவருடைய இளமைக் காலத்தில் பூவாளூரில் இவர் தந்தை முதலானவர்களால் முன்னெடுக்கப்பட்ட சைவ சித்தாந்த சங்கத்திற்கு வருகை தந்த ஏராளமான தமிழ்ச் சான்றோர்களுக்குத் தொண்டாற்றியுள்ளார்.

வீரபாண்டிய கட்டபொம்மன் பரம்பரையைச் சேர்ந்த பெரும்புலவர் ஜெகவீர பாண்டியனார், பெரும்புலவர் வச்சிரவேலு முதலியார், "சைவசித்தாந்த சரபம்" அருணை வடிவேல் முதலியார், பெரும்புலவர் நடேச முதலியார், தனித்தமிழ் இயக்கத்தின் தந்தை மறைமலையடிகளின் மகன் மறை.திருநாவுக்கரசு, "தொல்காப்பியச் செம்மல்" பேராசிரியர் கு.சுந்தரமூர்த்தி, தமிழ்ப் "பண்ணாராய்ச்சி வித்தகர்" குடந்தை. ப.சுந்தரேசனார் முதலான பற்பலருக்கு ஊழியம் செய்துள்ளார். அவர்களின் வாய்ச்சொற்களைச் செவிமடுத்துள்ளார். பெரியவர்களின் அணுக்கம், தமிழார்வத்தை இளமையிலேயே இவர் நெஞ்சில் ஊறச் செய்துள்ளது.



இந்தத் தமிழார்வம், தமிழ்த்தாத்தா உ.வே.சாமிநாதையரின் ஆசிரியர் பூவாளூர், சி.தியாகராச செட்டியாரின் பெயரில் தமிழ்ப்பேரவை ஒன்றை நிறுவ இவருக்கு உதவியது. பூவாளூரில் உள்ள இளைஞர்களை ஒன்றிணைத்து உருவாக்கப்பட்ட இந்த அமைப்பின்வழி 13 ஆண்டுகள் அறிஞர்களை அழைத்துவந்து சங்க இலக்கியங்கள் குறித்துச் சொற்பொழிவாற்றச் செய்துள்ளார். குமரிமுதல் புதுதில்லிவரை பூவாளூரின் பெயரைக் கொண்டுசேர்த்த பெருமை இவரைச் சாரும்.



**இலவசமாய்த் தமிழ் வகுப்புகள்**

பூவாளூரில் தமது 20ஆம் அகவையில் 11ஆம் வகுப்பு மாணவர்களுக்குத் தமிழ் இலக்கண வகுப்புகளை இலவசமாய் நடத்தத்தொடங்கினார். பின்னர்த் திருக்குறளையும் ஏழிளந்தமிழ் எனப்படும் ஆத்திசூடி முதலான நீதி நூல்களையும் 52 (13.04.1972 முதல் இப்போதுவரை) ஆண்டுகளாகத் தொடர்ந்து கற்பித்து வருகிறார். இதற்காக ஏறக்குறைய 9500 மணி நேரத்தைச் செலவிட்டுள்ளார். கூடுதலாக 20 மணித்துளிகள் யோகாவும் கற்றுத்தருகிறார்.



பெற்ற பிள்ளைகளைப் போல் மற்ற பிள்ளைகளும்

இவருடைய மகன் திருமூலநாதன் நான்கு அகவையிலேயே திருக்குறள் முழுமையும் கற்று உலகச்சாதனை படைத்தார். மேலும் 22 தமிழ் இலக்கிய நூல்களிலிருந்து ஆயிரக்கணக்கான பாடல்களைப் பாடினார். இந்தியாவிலும் கடல்கடந்து சென்றும் ஏராளமான மேடைகளில் பாடியும் பேசியும் கவனகங்களைச் செய்தும் பல பதக்கங்களையும் எண்ணற்ற பரிசுகளையும் பெற்றுள்ளார். இவருக்கு நான்கு அகவையிலேயே மதிப்புறு முனைவர்ப் பட்டத்தைக் கலிபோர்னியாவிலுள்ள World Academy of Arts and Culture என்ற அமைப்பு வழங்கியுள்ளது.




இவருடைய மகள் காந்திமதி ஏழு அகவையில் திருக்குறள் முதலாகப் பல இலக்கியங்களிலிருந்து பல நூறு பாடல்களைத் தம்பியுடன் சேர்ந்து கூறும் ஆற்றல் பெற்றிருந்தார்.

தம்முடைய பிள்ளைகளைப் போல அறிவார்ந்த பிற பிள்ளைகளும் இருக்கக்கூடுமே என்று நினைத்த இவர், தென்காசியை அடுத்த ஆய்குடியில், தம் மகன் பெயரில் "திருக்குறள் திருமூலநாதன் அறக்கட்டளை" என்ற ஓர் அறக்கட்டளையை 1997இல் நிறுவி, 1330 குறள்களை மனனமாகக் கூறும் பள்ளிச் சிறுவர்களுக்கு (1முதல் 12ஆம் வகுப்புவரை) உரூபா.1330-உம் திருக்குறள் செல்வன் / செல்வி விருதும் வழங்க ஏற்பாடு செய்தார். கடந்த 26 ஆண்டுகளில் தமிழகம், புதுவை ஆகிய மாநிலங்களிலிருந்து ஆயிரக்கணக்கான மாணவர்கள் பணமுடிப்பும் விருதும் பெற்றுள்ளனர்.

கடந்த சில ஆண்டுகளாகப் பரிசுத்தொகை 2000 உருபாயாக உயர்த்தப்பட்டுள்ளது. இதற்கு ஆகும் செலவுகளுக்காக இதுவரை யாரிடமும் எந்த நன்கொடையும் இவர் பெற்றதில்லை. தமது வருமானத்திலிருந்தே வழங்கி வருகிறார்.



### தமிழ்நிறை துணைவியார்

இவருடைய துணைவியார் திருக்குறள் கி.ம.நாகவல்லி அம்மையார் பூவாளூர்த் தியாகராசரின் ஐந்தாம் தலைமுறையைச் சேர்ந்தவர். வீட்டில் நாள்தோறும் தேவார, திருவாசகப் பாடல்களைப் பண்ணுடன் பாடும் வழக்கம் இருந்தமையால் இயல்பிலேயே குடும்பக் கொடையாகத் தமிழறிவைப் பெற்றவர். இவரும் இவருடைய அண்ணன் கி.ம.பழநியப்பனாரும் பன்னிரு திருமுறைகளில் நூற்றுக்கணக்கான பாடல்களை மனனமாகப் பாடவல்லவர்கள். மேலும், இவர் பன்மொழி அறிவுடையவர். 1330 அருங்குறளும் மனப்பாடம் செய்தவர்.

### தாய்மொழியில் ஒப்பமிடச் செய்தவர்

அரசுப் பணியாளர்கள் தமிழில் ஒப்பமிட வேண்டுமென்று அரசாங்கம் 1978இல் அரசாணை வெளியிட்டது. ஆனால், இதனை அரசு ஊழியர்கள் பொருட்படுத்துவதில்லை. இந்நிலையில் இவர் தலைமையாசிரியராகப் பணியாற்றிய காலத்தில் ஆசிரியர்கள் அனைவரையும் தமிழில் கையொப்பமிடச் செய்தார். இதனை 1980 முதல் நடைமுறைப்படுத்தினார்.




இவரால் பள்ளியில் சேர்க்கப்பட்ட 5000 மாணவர்களுக்கும் தமிழில் கையொப்பமிடும் பழக்கத்தையும் தங்களுடைய பெயரின் முன்னெழுத்தைத் தமிழில் போடும் பழக்கத்தையும் உருவாக்கினார்.

### சொற்பொழிவாளர்

தமிழகத்திலுள்ள பல கல்வி நிலையங்களிலும் திருத்தவத்துறை வட்டத்திலுள்ள ஓய்வூதியர் சங்கத்தின் ஒவ்வொரு மாதக்கூட்டத்திலும் அரை மணி நேரம் திருக்குறள் குறித்துச் சொற்பொழிவாற்றி வருகிறார். அத்துடன் அமிர்தம் 24X7 வலையொளி (Youtube Channel) மூலம் திருக்குறள், வள்ளலாரின் திருமுறைகள் முதலானவற்றைப் பற்றி 500க்கும் மேற்பட்ட காணொளிகளில் பேசியுள்ளார்.

**குடும்பம் ஒரு கோயில்**



இவருடைய பெற்றோர் இவருக்குச் சிறந்த முன்மாதிரியர்களாகத் திகழ்ந்ததாகக் கூறுகிறார். பூவாளூரில் சைவ சித்தாந்தச் சபையை அமைப்பதில் ஆர்வங்காட்டி, அதனை வளர்த்தெடுத்தவர் இவருடைய தந்தையார் பொ.பிச்சன் அவர்கள். அறுவை (துணி) வாணிகம் செய்த இவர், “காலணா இலாபம்வைத்துத் துணியை விற்றாலே போதுமானது”







என்றும் “ஏழைகள் என்று தெரிந்தால் அந்த இலாபமும் வேண்டா. உள்ள விலைக்கே கொடுத்துவிடு” என்றும் இவரிடம் கூறினாராம். அவரின் தயாளக் குணம்தான் இந்த தயாபரனார்க்கும் தொற்றிக்கொண்டுள்ளது.

இவருடைய தாயார் சா.காந்திமதி அம்மையார் அன்பே வடிவானவர். அத்துடன் நாள்தோறும் திருவாசகப் பாடல்களை மனமுருகப் பாடிப் பரவசமடைந்தவர்.

**பயன் கருதாத தொண்டிற்கு இல்லை தடை**

இவ்வாறு ஆண்டுதோறும்திருக்குறளுக்காக இலட்சக்கணக்கிலும் பிற அறப்பணிகளுக்காக எண்ணற்ற ஆயிரங்களையும் செலவிடுகிறார். இத்தனைக்கும், முன்னர் இவருடைய சம்பளமும் இப்போது ஒய்வூதியமும்தான் வருமானம். இப்போது பிள்ளைகள் சம்பாதித்தாலும் அவர்களுடைய வருமானத்திலிருந்து ஓர் உரூபாய்கூட இதற்கென இவர் எடுப்பதில்லை. இவையெல்லாம் எப்படி உங்களால் முடிகின்றன என்று கேட்டால், அவர் சொல்லும் பதில் வியப்பைத் தருகிறது.

“எனக்கோ வீட்டினருக்கோ தேவைகள் குறைவு. எந்த ஆடம்பரமும் இல்லை. உண்ண உடுத்த உறங்கப் போதுமான அளவு பொருட்கள் இருக்கின்றன. நோயுமில்லை. ஆகையினால் மருந்தில்லா வாழ்க்கை வாய்த்திருக்கிறது. மிகச் சிக்கனமாக வாழ்கிறோம். ஆகவே பணத்தை நற்காரியங்களுக்குச் செலவிடுகிறேன்" என்கிறார்.

**விருதுகள் வேண்டாத விந்தையர்**

இவர் இத்தனை செயல்கள் செய்தும் அரசிடமிருந்து எந்தவித விருதும் பாராட்டும் இவர் பெற்றதில்லை. தமிழக அரசின் நல்லாசிரியர் விருதுக்கு விண்ணப்பிக்கும்படி, கல்வி அதிகாரிகள் பலமுறை கேட்டும்கூட இவர் மறுத்துவிட்டார்.

ஏனென்று கேட்டால், மிக அடக்கமாக “நல்லாசிரியர் விருது பெற்றுத்தான் நான் நல்லாசிரியர் என்பதை அறிவித்துக்கொள்ள வேண்டாமென்றும் என்னுடைய செயல்களின்வழியாக வெளிக்காட்டுவோம் என்றும் விட்டுவிட்டேன்” என்கிறார்.

**தேடி வந்த விருதுகள்**

பாம்பறியும் பாம்பின்கால் என்பதைப்போலச் சில இலக்கிய அமைப்புகள் இவரின் அருமைபெருமைகளை அறிந்து விருதுகளை வழங்கியுள்ளன. சென்னையிலுள்ள தமிழகக் கல்வி ஆராய்ச்சி வளர்ச்சி நிறுவனம் “சிறந்த ஆசிரியர்” விருதை (05.09.2008) வழங்கியுள்ளது. “திருக்குறள் வழிச்சீலர்” (2010), “திருவள்ளுவர் விருது” (2012) ஆகியவற்றை ஈரோடு தமிழ்ச் சங்கமும் “பண்ணாய்வான் ப.சுந்தரேசனார் சீர்பரவுவார்” என்ற விருதைத் (2012) திருத்தவத்துறை ப.சுந்தரேசனார் பணிமன்றமும் மேலும் பல்வேறு விருதுகளைப் பெற்றவர்.

**மனம் நிறைவைத் தந்த பணிகள்**

“பல பணிகளைச் செய்துள்ளீர்கள். உங்களுக்கு மனநிறைவைத் தந்த பணிகளென்று எவற்றைச் சொல்வீர்கள்” எனக்கேட்டபோது..

“நான் பணியாற்றிய நடுநிலைப்பள்ளியை உயர்நிலைப் பள்ளியாகத் தரம் உயர்த்த 19 ஆண்டுகள் போராடி அதைச் செய்துகாட்டினேன். என்னுடைய பணிக்காலத்தில் ஏறக்குறைய 6000 பரிசுகளை மாணவர்கள் பெற்றுள்ளனர். திருக்குறள் பரப்பும் பணியோடு சமூகப்பணிகள் சிலவற்றைச் செய்துள்ளேன். வீட்டுக்கும் நாட்டுக்கும் பயனுள்ளவகையில் சிறிது வாழ்ந்துள்ளேன் என்பதே மனத்துக்கு நிறைவைத் தருகிறது” என்று மிகுந்த தன்னடக்கத்துடன் பதிலளிக்கிறார்.

“இவ்வாறு ஆண்டுதோறும் இலட்சக்கணக்கில் பணத்தைச் செலவுசெய்ய தங்கள் மனைவி எதுவும் சொல்வதில்லையா?” என்று கேட்டால், “நான் பேச நினைப்பதெல்லாம் நீ பேச வேண்டும். நீ பேச நினைப்பதெல்லாம் நான் பேச வேண்டும்” என்ற பாடலைப் பாடிக்காட்டி, “அறத்தான் வருவதே இன்பம்” என்றும்

> “ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
> வைத்திழக்கும் வன்க ணவர் (ஈகை, குறள் 228).

> “நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை
> மேற்சென்று செய்யப் படும்” (திருக்குறள், நிலையாமை, 335)

என்ற குறள்களையும் கூறி நம்மைத் திகைக்கவைக்கிறார்.

“மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன், ஆகுல நீர பிற” (34) என்ற குறள்தான் இவருக்கு மிகவும் பிடித்த குறள் என்கிறார். இவருடைய அடக்கமும் உயர்ந்த பண்புகளும் வள்ளுவப் பெருந்தகை கூறியதைப்போல இவரை அமரருள் உய்க்கட்டும்.

**(கட்டுரையாளர்: முனைவர் கி.சிவா, விரிவுரையாளர், தமிழ்த்துறை, காந்திகிராம கிராமிய நிகர்நிலைப் பல்கலைக்கழகம், திண்டுக்கல் - 624302, பேச. 97517 79791).**

# திருக்குறள் கற்கும் நெறிமுறைகள்

## முனைவர். தமிழண்ணல்

இவ்வுலகிற்குத் தமிழனின் கொடை திருக்குறள். உலகமானுட வாழ்வுக்கு நெறிமுறை வகுத்த மாமறை அது. இந்தியத் தேசிய நூலாகும் தகுதியுடைய நூல் திருக்குறள் ஒன்றேயாகும். முதலில் அது தமிழப் பண்பாட்டின் பிழிவு என்பதையும், தமிழர்தம் பண்பாடு உலகளாவிய பொது நோக்குடைய தென்பதையும், அதனாலேயே அது உலகப் பொதுமறையாகும் தகுதியும் பெற்றுளதென்பதையும் நாம் அறிதல் வேண்டும்.

திருக்குறள் தமிழனின் அடையாளம் காட்டும் நூல் என்பதைத் தமிழராகிய அனைவரும் ஒப்புதல் வேண்டும். நாம் எக்குலம், சமயம், நாடு சார்ந்து வாழ்பவராயினும், திருக்குறள் நம் பொதுமறை என ஏற்றலும் குறள்நெறி வாழ்வைப் பேணுதலும் வேண்டும். திருக்குறளை நம் நீதிமன்ற உறுதிமொழி நூலாக - பிரமாண நூலாக ஏற்றல் வேண்டும். அதற்கு முன்னோடியாக, நம் நிகழ்வுகள், சடங்குகள், கூட்டங்களில் திருக்குறளை வைத்து, உறுதிமொழி எடுத்துக் கொள்ளும் பழக்கம் தமிழ்கூறும் நல்லுலகமெங்கும் பரவவேண்டும்.

திருக்குறள் மூலத்தை முக்கிய நாட்களில், வழிபாட்டு நேரங்களில், காலை மாலையில், குழந்தைப் பருவம் முதல் முதுமை முடிய ஓதும் பழக்கம் வேண்டும். திருக்குறள் முற்றோதுதல், திருமறை முற்றோதுதல், திவ்வியப் பிரபந்தம் முற்றோதுதல் மூன்றும் அடிக்கடி கூட்டு வழிபாடாக நடத்த வேண்டும்.

நயம் காணும் முயற்சியில் இறங்குதல் தவறன்று. ஆர்வ மிகுதியால் நம் கருத்தைத் திருக்குறளில் ஏற்றிப் பார்க்கும் போக்கு தவறாகும். புதுமையுடன் உரை எழுதி, படிப்பவரை வியக்க வைக்க வேண்டுமென்று, இல்லாதவற்றையும் வள்ளுவத்தில் ஏற்றிப் பார்க்கும் கற்பனை முயற்சியிலும் ஈடுபடலாகாது.

"திருக்குறள் மூலம்" முதலில் அனைவருக்கும் நன்கு விளங்க வேண்டும். மாணவர்கள் பாடநூல் போலப் படிக்க இடம் தரவேண்டும். மக்கள் குறளில் என்னதான் சொல்லியிருக்கிறதென்பதை, முற்றும் உணருமாறு விளக்கங்கள் அமைய வேண்டும். அதற்காக விரித்தெழுதி, ஆய்வுரை போலாகி, ஓரளவு படிக்க ஆசைப்படுவோரையும், அயர்ச்சியடைய வைக்கவும் கூடாது. சுருங்கச் சொல்லல். விளங்க வைத்தல்' என்ற உத்தி பயன்படுத்தப்பட வேண்டும்.

திருக்குறளின் உள்ளார்ந்த கருத்து எடுத்துப் படிப்பவர் எவர்க்கும் விளங்கிவிட வேண்டும். வள்ளுவர் உள்ளம் - உட்கிடை - உள்ளொளி யாதெனத் தெள்ளத் தெளிவுற வேண்டும். இவையே ஒரு நுண்பொருளுரையின் குறிக்கோளாகும்.

திருக்குறளில் முழுமைப் பார்வை தேவை. அதாவது ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளையும், முழுவதும் பயில்வார்க்கே, தனி ஒரு குறளின் உண்மைப் பொருள் விளங்கும். இதற்குக் குறள் மூலங்களையே திரும்பத் திரும்பப் படிக்க வேண்டும். மூலத்தை இவ்வாறு படித்துணர நுண் பொருளுரைகளை, ஒரு கைவிளக்காக மட்டுமே பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

குறளுக்குள்ளேயே குறளுக்கு உரை தேட வேண்டும். இயலுமானால், குறள்கள் வழியாகவே குறள் உரை விளக்கம் அமைய வேண்டும். 'ஒழுக்கத்துநீத்தார்' (2) என்பதற்கு உரை, 'பொய்தீர் ஒழுக்க நெறி' (6) என்பதில்தான்உளது. நூல் முழுவதும் இவ்வாறு தேலாம். பொய்தீர் ஒழுக்கநெறி நின்றுநீத்தாரென்பதே பொருந்தும் உரை. "தத்தம் வருணத்திற்கும் நிலைக்கும் உரியஒழுக்கம்" எனப் கட்டடப் பிறரும் எழுதி இருப்பன பொருந்தாஉரைகளாகும்.

சங்க இலக்கியப் பின்னணியில் எழுந்தது குறள். தொல்காப்பியம், சங்க இலக்கியம், இரட்டைக் காப்பியம் (சிலப்பதிகாரம், மணிமேகலை) ஆகியவை திருக்குறளை விளங்கிக் கொள்ள உதவுமிடங்கள் பலவுள. "தோன்றிற் புகழொடு - தோன்றுக அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று" (236) என்றகுறளுக்கு விளக்கம் பெற, புறநானூற்று ஔவையின் பாடல் ஒன்று உதவுகிறது

…இல்இறைச் செரீஇய ஞெலிகோல் போல
தோன்றாது இருக்கவும் வல்லன்; மற்றதன்
கான்றுபடு கனைஎரி போலத்
தோன்றவும் வல்லன், தான் தோன்றுங் காலே. (315)

வீட்டு இறப்பிலே செருகிய தீக்கடைக்கோல் போல அமைதியாய் இருக்கும் இயல்பும் அதியமானிடம் உண்டு. கடைந்ததும் அது பற்றி எரிவதுபோலப் போரில் இறங்கிவிட்டால் விளங்கித் தோன்றும் வீரமும் அவனிடம் உண்டு. எதிலும் எங்கும் தோன்றுங்கால், விளங்கிப் புகழுடன் தோன்றவேண்டும் என்பதே இதன் பொருள் என்பது இதனால் விளங்கும். முன்னையஉரையாசிரியர்கள், "பிறந்தால் புகழோடு பிறக்க வேண்டும்; இன்றேல் விலங்காகப் பிறந்திருக்கலாம்" என எழுதுவன பொருந்தா.

தொல்காப்பியம் முதலாய பழந்தமிழ் நூல்கள் உணர்த்தும் சமுதாயப்பின்புலமும், குறளுக்கு உரைகாணத் துணை செய்யும். 'தெய்வம் தொழாஅள்கொழுநற்றொழுது எழுவாள் பெய்யெனப் பெய்யும் மழை' (55) என்பதற்கு உரைகாணச் சங்கப் பாடல்கள் உணர்த்தும் சமுதாயப் பின்புலம் பற்றிய அறிவே உறுதுணையாகும். 'ஒள்ளிழை மகளிர் உயர் பிழை தொஃழுஉம், புல்லென் மாலை' (239) என்பது அகநானூறு. கன்னிப் பெண்கள் நல்ல கணவன் வாய்க்க, பிறைதொழுதல், ஒரு சடங்காக நடந்த காலம் அது. 'பிறை தொழுக என்றல்' என்பது ஒர் அகத்துறை. தோழி. அவ்வாறு சொல்லியும், தலைவி மற்ற பெண்களுடன்சேர்ந்து பிறை தொழாது நின்றால், அவள் யாரையோ மனத்தினுள் வரித்துவிட்டாள் என்பது பொருள். இவ்வாறு தோழி, தலைவியின் களவொழுக்க இரகசியத்தைக் கண்டுகொள்வாள். எனவே "தெய்வம் தொழாது, கணவனைத்தொழு தெழுவாள்" என்பது பிறை தொழாது, திருமணம் செய்துகொண்டு, "மங்கல மடந்தையாய் வாழ்பவள் என்றே பொருள்படும். 'பெய்யெனப் பெய்யும்மழை' என்பதற்கும், விளக்கம் பெறக் கலித்தொகை உதவுகிறது. 'அருமழை தரல்வேண்டின், தருகிற்கும் பெருமையளே' (39) 'கில்' ஆற்றலை உணர்த்தும் இடைச்சொல் என்பது இலக்கணம். மழையைப் பெய்விக்க வேண்டுமென்றால், அவ்வாறு தரவும் வல்லவள் என்பது குறிப்பு. 'இவன் ஊரையே விற்றுவிடுவான்; மணலைக் கயிறாகத் திரிப்பான்' என்பன போலும் உலக வழக்குகள். அவ்வாறுசெய்து விடுவர் என்பதை நேரே உணர்த்துவன அல்ல. எல்லாத் திறமையும் ஆற்றலும் உள்ளவர் என்பது கருத்து. மழையையும் பெய்விக்கக்கூடிய அவ்வளவு சிறந்த ஆற்றலைக் கற்பு வாழ்வு தரும்" என்பதே குறிப்பு. இவைபோல, திருக்குறள்

உரை காண, அன்றைய சமுதாயச் சூழல், வாழ்க்கைநடைமுறைகளையும் கருத்திற் கொள்ள வேண்டும்.

அக்காலச் சமயப் பின்னணி பற்றியும் முழுவதும் தெரிந்திருந்தாலன்றிப்பொருள் காணலில் தடுமாற்றம் ஏற்படும். அன்று வைதிகம், சமணம், பௌத்தம் மூன்றும் நன்கு பரவி, ஒன்றுடன்ஒன்று பகைத்து, சமயப் பூசல்களால் ஒன்று ஓங்கிய காலத்தில் மற்றவை தாழ்ந்து இவ்வாறு ஊசலாடிய காலம் அது. திருவள்ளுவர் இம்மூன்றனையும் நன்குஅறிந்த நிலையில், தமது நூலைப் படைத்ததால்தான், தமது கோட்பாடுகளைஒரு நிறுவனச் சமயமாக்காது, பொதுமை போற்றிக் கூறிச் சென்றார். அவர்மட்டும், தாமும் ஒரு நிறுவனச் சமயத்தைத் தோற்றுவித்திருந்தால், இன்றுநாடெங்கும் 'வள்ளுவ மடங்கள்'' தோன்றி, வளர்ந்திருக்கும். கல்லாடர் ''சமயக்கணக்கர் மதிவழி கூறாது, உலகியல் கூறி, பொருள் இது என்ற வள்ளுவன்'' எனக் கூறி இருப்பது முற்றிலும் பொருந்தும்.

சமண, புத்த சமயங்கள் வேள்விகளை மறுத்தன. அவைபோலஉயிர்க்கொலை செய்யும் யாகங்கள், வேள்விகளை இவரும் மறுக்கின்றார். பிறப்பால் சாதி என்பதை மறுத்து, ஒழுக்கமே குலம், குடிக்கு அளவுகோல் என அறுதியிடுகிறார். புத்த, சமண சமயங்கள் கடுந்துறவைப் போதித்தன. எனினும் நாட்டில், போலித் துறவே, இன்று போல் அன்றும் பரவிக் கிடந்ததால், இல்லறம்ஒன்றே அறமாகுமென்றும் துறவும் பிறரால் பழிக்கப்படாத நிலையில்ஏற்கப்படலாம் என்றும் கூறுகிறார். போலித் துறவு, தவம் போன்றவற்றை மிகவும்கடிந்து கூறுகின்றார். இத்தகைய, அவரது காலத்துப் பின்னணியை வைத்தே, குறளுக்கு உரைகாண வேண்டும். 'இல்வாழ்வான் என்பான் இயல்புடையமூவர்க்கும் நல்லாற்றின் நின்ற துணை'' (41) என்ற குறள், அன்றைய வைதிகப்பின்னணியில் எழுந்தது. பிரம்மச்சரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் என்ற நான்கு நிலைகள் அன்று விரிவாகப் பேசப்பட்டன. இல்லறம் பெருமைப்படுத்தப்படவில்லை. வாழ்க்கையில் 'வெறுப்பு நோக்கையே' சமயங்கள் போதித்தன. திருவள்ளுவர் அதை மாற்றி, இயல்பாக உண்மையாகத் தத்தம்நினைவில் வாழும் ஏனைய மூவர்க்கும் இல்லறத்தானே துணை எனக் கூறி, இல்லறத்தானுக்கு ஏற்றம் தருகிறார். இவ்வாறு அன்றைய சமயப் பின்புலத்தை அறிந்து, பொருள் காண்பதே நெறியும் முறையுமாகும்.

திருவள்ளுவர் ஒன்றே முக்கால் அடியில், சுருங்கக் கூற எடுத்துக்கொண்டதால், அதற்கெனப் பல உத்திகளைக் கையாள வேண்டியிருந்தது.சொல், தொடர், குறிப்புப் பொருள் எனப் பலவற்றில், நுட்பமான உத்திகளைக்கையாள்கிறார். இன்று ஒரு மிகப் பெரிய ஆய்வு நூலாக விரிக்கக் கூடியனஅதிலுள. 'வரைவின் மகளிர்' அதிகாரத்தில் 'பரத்தையர்' எனக் குலப் பெயரைக்குறிக்கவே இல்லை... இன்று 'பாலியல் தொழிலினர்' என, வேறு விதமாகக்குறிப்பதுபோல், அவர் திருமணமாகாத மகளிர் என ஆள்வது மிகுந்த தொலைநோக்குடைய சிந்தனையாகும்.

சிலவற்றை வரையறை விதிகளாகத் தருகிறார். அதனை ஒருவாய்ப்பாடாகக் கொண்டு, எதனுடனும் பொருத்திப் பார்க்கலாம். 'இதனை இதனால் இவன் முடிக்கும் என்றாய்ந்து, அதனை அவன்கண் விடல்' (517) என்பது, எச்சூழலுக்கும் பொருந்திப் பார்க்கக் கூடியதல்லவா? இதுபோலஇன்னும் நுட்பமாய்க் கூறுமிடங்கள் பல உள. அவற்றைத் தேடிக் காண்பதே திருக்குறட் கல்வியாகும். சில குறள்கள் அதிகாரப் பொருளுடன் பொதுப் பொருளும் தருகின்றன. ஒரு அதிகாரத்திற்கு 10 குறள் என்னும்போது அவ்வவ்வதிகாரத்திற்கு அவைஅவை உரியன என்பது மறுக்கவியலாது. வைப்பு முறை மாறினும் குறள் அதற்குரிய தேயாம்.

'குணம்நாடிக் குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடிமிக்ககொளல்' (504) என்ற குறள் தெரிந்து தெளிதலில் வருகிறது. ஒருவரைவேலைக்கு அமர்த்தும் பொழுது இவ்வாறு குணம் நாடி குற்றமும் நாட வேண்டும்என்பது முதற் கருத்து. ஒரு நூலைத் திறனாயும்போதுகூட நாம் குணம் நாடிக்குற்றமும் நாட வேண்டுமென உரை காண்பன துணைப் பொருள்களே. அதிகாரத்தை நினைவிற் கொள்ளாது பொருள்கூற முற்படுதல் அத்துணைச்சிறப்புடையதாகாது.

திருக்குறள் மனிதன் எவ்வகையிலேனும் உலக வாழ்வில் வெற்றி பெறவேண்டும் என்பதற்கே எழுதப்பட்டதாகும். இன்று மேனாட்டார் தன் முயற்சி, தன்னம்பிக்கை, தன்முன்னேற்றம் என்ற கருத்தில் எழுதும் நூல்கள் மிகப் பல. அவை தமிழிலும் மொழியாக்கம் பெற்று வருகின்றன. முன்னரே பலர்எழுதியிருந்தாலும் தமிழில் டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி இதன் வழி பலநூல்களை எழுதி மக்களிடையே ஓர் எழுச்சியை ஏற்படுத்த முயல்கிறார். உலகில் முதன்முதலாகத் தன் முன்னேற்ற நூல் எழுதிய பெருமை திருவள்ளுவரையே சேரும். இந்நோக்கிலும் பொருள் காண வேண்டும். “தன்னைத்தான் காதலனாயின்” (209); “தன்னைத்தான் காக்கின்” (305); 'வகை அறிந்து, தற்செய்து, தற்காப்ப' (878) என்றிவ்வாறு வரும் நூற்றுக்கணக்கான குறள்கள் தன்னம்பிக்கை ஊட்டுவன; தன் முன்னேற்றத்திற்கு வழி காட்டுவன.

திருவள்ளுவர் 'தேடல் உத்திக்கு வழிவகுத்துத் தம் நூலையாத்துள்ளார். 'நவில் தொறும் நூல் நயம் காணுமாறு குறள் எழுதப்பட்டுள்ளது. அதனால் ஆயிரக்கணக்கானவர் உரை எழுதியும், பொழிவாற்றியும் ஆராய்ந்தும்குறள் நுண் பொருளைத் தேடுகின்றனர். "குறுகத் தறித்த குறளாக' இருப்பதால், இது தேவைப்படுகிறது. இவை அனைத்தும் வள்ளுவர் உள்ளத்தைக் கண்டு மகிழவே முனைகின்றன. அதனால் திருக்குறளும் நிலைபேறடைகிறது.

வள்ளுவப் பெருமகன் 'இயைபு' உத்தியைப் பயன்படுத்துகிறார். ஒரு குறளோடு இயைபுபடுத்திப் பார்க்குமாறு, பிறிதொரு குறளைப் பிறிதோரிடத்தில்வைத்துள்ளார். “செயற்கரிய செய்வார் பெரியர், சிறியர் செயற்கரிய செய்கலாதார் (26) என்ற குறள் பெரியவர் பற்றிப் பேசுகிறது. “பெருமை: அதிகாரத்தில், 'பெருமை உடையவர் ஆற்றுவார். ஆற்றின் அருமை உடையசெயல்' (975) என வரும் குறளுடன், முன்சுட்டிய குறள் இயைபுடையதாகிறது. இக்குறள் முன்னைய குறளுக்கு உரைபோலவும் உளது. இத்தகைய, இயைபுபடுத்தி நோக்க வேண்டிய குறள்கள் பலவுள.

நடையை வைத்தும் உத்திகளை வைத்தும், திருக்குறளுக்கு உரை தேடவேண்டுமென மூதறிஞர் வ.சுப.மாணிக்கம் சுட்டிக் காட்டியுள்ளார். "அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை' (37) என்ற குறளில், இதை அறநெறி என்று காட்ட வேண்டாம் என்பதே பொருளாகும். இதை நிறுவ, 'மழித்தலும் நீட்டலும் வேண்டா' (280) “அஞ்சாமை அல்லால்துணை வேண்டா” (497) என வரும் இதே நடையுடைய பல குறள்களும் வேண்டாம் என்றே பொருள்படுதலை மூதறிஞர் எடுத்துக் காட்டுகின்றார்.

மேலைச் சிவபுரி இராம. முத்தப்பன் தம் தந்தையார் கூறியதாக ஒருகுறளுக்கு வாழ்க்கையொடு பொருந்திய உரை ஒன்றைக் கூறினார். அக்குறள், “குற்றம் இலனாய், குடிசெய்து வாழ்வானைச் சுற்றமாச் சுற்றும் உலகு' (1025) என்பதாகும். நம் பெண்ணுக்கு மாப்பிள்ளை தேடி ஓர் ஊருக்குப் போகிறோம். “அந்தப் பையனா, அவனுடைய அப்பா ஒரு கொலை மட்டும்

செய்தவர். இப்போது விடுதலையாகி வந்துவிட்டார். பையன் ஒவ்வொருக்கால் குடிப்பான். மற்றபடி ஒரு குற்றமும் இல்லை” என்று ஊரார் சொன்னால், அந்தப் பையனுக்குநம் பொண்ணைக் கொடுப்போமா? சம்பந்தம் வைத்துக் கொள்வோமா? சுற்றமாச் சுற்ற நம் மனம் ஒப்புமா? குற்றமில்லாத குடிவழியா, பையனா என்றுதானே தேடுவோம்.

வேறு ஓர் ஊருக்குப் போகிறோம். “பையனுக்கு அப்பா இல்லை. இரண்டு தங்கைகள். அவர்கள் இருவருக்கும் திருமணம் செய்து வைக்கவே இத்தனைநாளாய்ப் பாடுபட்டான். இப்போது, அவர்கள் இருவருக்கும் திருமணம் முடிந்து விட்டதால், இவனுக்குப் பெண் பார்க்கிறார்கள்” என்று ஊரார் சொன்னால், பொறுப்பு மிக்க, கடமையுணர்வுடைய அவனுக்கு நம் பெண்ணைத் தர நாம்மனம் ஒப்புவோம். அக்குடும்பத்தில் சம்பந்தம் உறவு வைத்துக் கொள்வோம்.அதுதான் 'சுற்றமாச் சுற்றுதல் ஆகும். இங்ஙனம் அன்றாட வாழ்வொடும், வரலாற்று நிகழ்ச்சிகளொடும், கதைகளொடும், சிறு சிறு பொருத்தமான உலகநிகழ்ச்சிகளொடும் பொருத்தி உரை விளக்கம் காண்பதால் குழந்தைகள், பள்ளிமாணவர்களைத் திருக்குறட் செயலூக்கிகளாக்க இயலும்.

நூலை முழுமையாக உணர்வோருக்கே, அந்நூலுள் 'மணியில் திகழ்தரும்நூல்போல் (1273) உள்ளோட்டமாக ஒடும் கருத்து நீரோட்டம் புலப்படும். “இந்தியச் சமயங்கள், தத்துவங்கள், அனைத்தும் உலக வாழ்க்கையை வெறுப்புநோக்குடன் அணுகவே பெரிதும் முயல்கின்றன. திருக்குறள் ஒன்றே உலகவாழ்க்கையை முழுவதும் விருப்பு நோக்கோடு அணுகச் செய்கின்றது. “திருக்குறளில் வானமிழ்தம் (தேவாமிர்தம்) இந்திரன், தாமரைக் கண்ணான் உலகு, அளறு போலும் புராண மரபுக் கூறுகளாம் தொன்மங்கள் மிகக்குறைவாக ஆங்காங்கு இடம் பெறுகின்றன. ஆனால், “தூரத்து மேகங்கள்போல் காணப்படும் அவை இவ்வுலக வாழ்வு பற்றிய நெறிகளை வலியுறுத்தஉதவியாக வருகின்றனவே தவிர, அவை பற்றிய கற்பனைகளை விளக்கவோ, விரிக்கவோ முனையவில்லை.” நாமும் குறள் முழுதும் ஒடும் பொதுநீரோட்டமனைய கொள்கைகளைக் கண்டு கொண்டுதான் குறள்களுக்குவிளக்கம் காண வேண்டும். திருவள்ளுவர் மேலுலகம் பற்றிஅக்கறைப்படவில்லை. அவர் கவலையெல்லாம் இவ்வுலகைப் பற்றியேயாம்.

உண்மையான துறவறத்தை அவர் வெறுக்கவில்லை. மறுக்கவில்லை. ஆனால் போலிகளை மிகக் கடிந்து கூறுகிறார். இல்லறமே அறம் -வாழ்வு நெறிஎன்பது அவர் கோட்பாடு. இல்லறத் துறவு, இல்லற வேள்வி என்பனவே அவர்போற்றுவன. ஏழு பிறப்பு என, மறுபிறப்பை, பிறவிச் சுழற்சியை ஒப்பும் அவர், அதிலிருந்து விடுபடுவது ஒன்றையே கூறி முடிக்கின்றார். ஊழ் பற்றி, அதுமுன்வினைப் பயன்' என்பது மட்டுமன்றி, பருவக்கால சுழற்சிபோல அமைகின்ற உலகச் சூழல் திருப்பங்களே ஆகும் என்னுமாறு அவர் விளக்கம் புதுமையாய்ச்செல்கிறது.

சில குறள்கள் பழைமையை மாற்றிப் புதுவிளக்கம் தருகின்றன. “அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுக-லான்” (30) என்பது அமந்தணர் என்ற சொல்லக்குப் புதுவிளக்கம். அச்சொல்குலம் பற்றியதன்று என்பது கருத்து.

“இன்சொலால் ஈரம் அளைஇப் படிறுஇலவாம் செம்பொருள்கண்டார்வாய்ச் சொல்' (91) என்பது இன்சொல்லுக்கு இலக்கணம் கூறுகிறது. தவம், துறவு, வாய்மை போன்ற பல அதிகார முதற்குறள்கள், அவ்வவ் அதிகாரத்தலைப்புக்கு இலக்கணம் கூறுவதுபோல் அமைந்துள்ளமை காண்க.

மடைமாற்று என்பது ஓர் உளவியல். பல இடங்களில் அவை மக்களைப்புதிய பயனுள்ள நெறிகளில் செலுத்தி, பயனற்ற, வேண்டாத நெறிகளைத் தாமேகைவிடுமாறு செய்ய முயல்கிறார். அவியுணவு என்பது வேள்வியில் தீ வளர்த்து, அதில் உயிரினங்களைப் போட்டு, தேவர்களுக்கு "அர்ப்பணம் 'செய்வதாகக்கூறுதில், அவருக்குச் சற்றும் உடன்பாடில்லை. "அவி சொரிந்து ஆயிரம் வேட்டலை' விட, உயிரைக் கொல்லாமையே நன்று என்பது அவர் கருத்து.

விருந்து படைப்பதை ஒரு வேள்வியாக அவர் விளக்குகிறார். கண்கண்டஉலக விருந்தினர்க்கு விருந்து படைப்பது, கண்காணாத தேவர்களுக்குஉணவு தரச் செய்யும் வேள்வியின் பயனைத் தருமென்று, மாந்தன் கருத்தைத்திசை திருப்புகிறார். மடை மாற்றுகிறார். நல்வழிக்குச் செலுத்துகிறார். இத்தகைய இடங்கள் நீரோட்டம்போல, நூல் முழுவதும் பரந்து, ஆழ்ந்து, நிறைந்து கிடக்கின்றன. பிராயச்சித்தம், கழுவாய் என்பதை அவர் குறிப்பிடவில்லை. பிற சமயங்கள் யாவும், இன்றைய அரசியல் கட்சிகள் போல, "எங்களிடம் வாருங்கள்! எல்லாப் பாவத்துக்கும் மன்னிப்பு வாங்கித் தருகிறோம். இன்ன இன்ன பாவத்துக்கு, இவையிவை பிராயச்சித்தச் சடங்குகளாகும். கொஞ்சம் பணம் செலவழித்து, பரிகாரம் செய்தால் போதும். செய்தபாவத்துக்கும், செய்யப் போகிற பாவத்துக்கும் பரிகாரம் கிடைக்கும்" என்றுநாளும் நூல்களை எழுதி, பேசி, விளம்பரம் செய்ய வேண்டியவை ஆயின. திருவள்ளுவர் ஒருவரே, இந்தியச் சிந்தனையில், செய்த பாவத்தை அனுபவித்தே தீர வேண்டும் என்றவர். பரிகாரத்துக்கும் மன்னிப்புக்கும் வழிசொல்லாதவர். நல்லதைச் செய்வதன் மூலமே அல்லதைப் போக்க முடியுமென்றவர். இன்றைய இந்தியா கெட்டுக் குட்டிச் சுவரானதற்கு, இப்பாவ விமோசன, பரிகார, பிராயச்சித்த, கழுவாய் தேடும் சடங்குகளையும் நம்பிக்கைகளையும் பரப்பியதே அடிப்படைக் காரணமாகும்.

திருக்குறளில் பண்புருவ இறைவழிபாடு, தலைமைப் பண்பை அடைதல், ஆளுமை மேம்பாடு, திறமைகளின் உச்சத்தைத் தொடுதல், காதல் வாழ்வு, பழகும் பண்பாடு, குடும்பநலம், ஆட்சத் திறன், தன்னம்பிக்கை, தன்முயற்சித்தவம், துன்பத்திற்குத் துன்பம், வினைக் கோட்பாடு, நட்புறவு, அயல்நாட்டுறவு, மனிதரைக் கொண்டு ஆளுதல், குடிமைப் பயிற்சி என மிகப்பல துறைகளாகத் தனித்தனியே பிரித்து நோக்கக்கூடிய கூறுகள் உள. இவைஅனைத்தையும் விளங்கிக் கொள்ளவும், இவற்றின் வழி பயிற்சி பெறவும் முனைந்தால்தான் குறள்வழி வாழ்வும், ஆட்சியும் பிறவும் அமையும்.

திருக்குறளின் உள்ளொளியைத் "தேடல்" நடந்து கொண்டேஇருக்கிறது; இன்னும் நடக்கும்.

திருவள்ளுவரின் உட்கிடையை அறிந்து பெரிதும் அருகிற் செல்லுதல், ஓரளவு சென்று தடுமாறுதல், மிக விலகிப் போய்விடுதல், திரும்பி விடுதலெனப்பலவாறு இம்முயற்சி நடந்து வருகிறது. நாமனைவரும் ஒவ்வொரு வகையில் திருவள்ளுவரை அணுகவே முயல்கிறோம்.

இங்குக் கூறிய, "கற்கும் நெறி முறைகளையும், இன்ன பிறவற்றையும் அளவுகோல்களாகக் கொண்டு, அறிவியல் முறையில் அணுகினால், வள்ளுவத்தின் உள்ளொளி தெள்ளிதிற் புலனாகும். அதை நாமும் உணர்ந்து, பிறர்க்கும் உணர்த்த, நம் உள்ளொளியைப் பெருக்கினால், 'உலப்பிலா ஆனந்தமாய, தேனினைச் சொரியும்' குறள் நுண்பொருளைச் சிக்கெனப்பற்றிக் கொள்ளலாம். அங்ஙனம் முயன்று முழு வெற்றி பெறும் நாளே, திருக்குறளைத் தமிழன் தன் அடையாள நூலாகக் காட்டிக் கொள்ளும் நன்னாளாகும்.

# நவில்தொறும் நூல்நயம்

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்
www.ValaiTamil.com

நிகழ்வு 41 பகுதி 1

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

01.12.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–பதிப்பாசிரியர்
FIRST ALL INDIA THIRUKKURAL SEMINAR PAPERS 1972
சிந்தனைச் செம்மல், பேரா. ந.சஞ்சீவி

நூல் பற்றிய நயவுரை
நேற்றைய முயற்சி - இன்றைய வளர்ச்சி - நாளைய உயர்ச்சி (பகுதி-1)
மருத்துவர் ந.வ.அஷ்ரஃப் குஞ்னு
துணைத்தலைவர்,
வன உயிரின அறக்கட்டளை
புது தில்லி

(1927–1988)

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 42 பகுதி 2

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

15.12.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–பதிப்பாசிரியர்
FIRST ALL INDIA THIRUKKURAL SEMINAR PAPERS 1972
சிந்தனைச் செம்மல், பேரா. ந.சஞ்சீவி

நூல் பற்றிய நயவுரை
நேற்றைய முயற்சி - இன்றைய வளர்ச்சி - நாளைய உயர்ச்சி (பகுதி-2)
மருத்துவர் ந.வ.அஷ்ரஃப் குஞ்னு
துணைத்தலைவர்,
வன உயிரின அறக்கட்டளை
புது தில்லி

(1927–1988)

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 43

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

22.12.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்
திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்
பேராசிரியர் மு.சண்முகம் பிள்ளை
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி (1970-90)
சென்னைப் பல்கலைக்கழகம்

நூல் பற்றிய நயவுரை
முதுமுனைவர் ப.திருஞானசம்பந்தம்
உதவிப்பேராசிரியர், தமிழ் உயராய்வு மையம்
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி (தன்னாட்சி)
மதுரை

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

---

கற்க கசடற
karka.in
மனத்துக்கண் மாசிலன் ஆதல்
வள்ளுவர் குரல் குடும்பம்
வலைத்தமிழ்.காம்

நிகழ்வு 44 பகுதி 2

இணைந்து வழங்கும்
நவில்தொறும் நூல்நயம்

வெள்ளிதோறும் திருக்குறள் நூல்கள் குறித்த எண்ணப் பகிர்வுகள்

29.12.23 வெள்ளிக்கிழமை மாலை 6.30-7.45

நூல்–நூலாசிரியர்
திருக்குறள் யாப்பு அமைதியும் பாட வேறுபாடும்
பேராசிரியர் மு.சண்முகம் பிள்ளை
திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி (1970-90)
சென்னைப் பல்கலைக்கழகம்

நூல் பற்றிய நயவுரை – பகுதி 2
முதுமுனைவர் ப.திருஞானசம்பந்தம்
உதவிப்பேராசிரியர், தமிழ் உயராய்வு மையம்
மன்னர் திருமலை நாயக்கர் கல்லூரி (தன்னாட்சி)
மதுரை

Zoom ID: 988 6476 9563
Passcode: 1330

voiceofvalluvar1330@gmail.com
www.voiceofvalluvar.org
https://karka.in
watch on: www.valaitamil.tv
www.youtube.com/ValaiTamil

# திருக்குறள் தற்சார்பு

எங்கள் மாவட்டம்-எங்கள் பொறுப்பு, எங்கள் மாவட்டப் பயிற்சியாளர், எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் முற்றோதல் செய்த ஒருவருக்கு வேலை, எங்கள் மாவட்ட அறம்சார் புரவலர் திருக்குறளுக்கு முன்வருபவரை, அவரது வணிகத்தை நாங்கள் முன்னிறுத்துவோம், எங்கள் மாவட்ட மாணவர்கள் பயன்பெறுகிறார்கள், எங்கள் மாவட்ட திருக்குறள் ஆளுமைகள் வழிகாட்டுகிறார்கள், எங்கள் மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து அரசின் பரிசினைப் பெற அதிக மாணவர்கள் திருக்குறள் படிக்கிறார்கள், எங்கள் மாவட்டத்தில் படித்து வெளிநாடு சென்றவர்கள் எங்கள் மாவட்டத்தில் திருக்குறள் படித்தவர்களுக்கு கல்வி, வேலைவாய்ப்பு, வெளிநாட்டு மாணவர் பயணம் என்று பலவகையில் துணைநிற்கிறார்கள்.

**திருக்குறள் புரவலராக உங்கள் மாவட்டத்தில்பொறுப்பேற்க அழைக்கிறோம்..**

**ஏற்கனவே பொறுப்பேற்றுள்ள புரவலர்களுக்கு நன்றி...!! நன்றி.. !!**

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் நன்கொடை பெறுவதில்லை. செயல்பாடுகளை கண்டறிந்து அறம் சார்ந்த மனிதர்கள், நிறுவனங்கள் அந்தந்த மாவட்டத்திலிருந்து அவர்கள் சார்ந்த மாவட்டத்தின் புரவலர் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்துகிறோம். மாணவர்களுக்கு சான்றிதழ் வழங்குதல், பரிசளித்தல், பகுதிநேர, முழுநேர திருக்குறள் முற்றோதல் பயிற்சியாளர்களுக்கு ஊக்கத்தொகையை நேரடியாக வழங்குதல் உள்ளிட்டவற்றிற்கு அந்தந்த மாவட்டத்திலிருந்து "திருக்குறள் புரவலர்கள்" தேவை.

| | | | |
|---|---|---|---|
| Ariyalur<br>அரியலூர்<br>Your Photo / Business Photo | Chengalpattu<br>செங்கல்பட்டு<br>**மணி பெரியகருப்பன்,**<br>Ohio, USA | Chennai<br>சென்னை<br>Your Photo / Business Photo | Coimbatore<br>கோயம்புத்தூர்<br>Your Photo / Business Photo |
| Cuddalore<br>கடலூர்<br>Your Photo / Business Photo | Dharmapuri<br>தர்மபுரி<br>Your Photo / Business Photo | Dindigul<br>திண்டுக்கல்<br>Your Photo / Business Photo | Erode<br>ஈரோடு<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Kallakurichi<br>கள்ளக்குறிச்சி<br>Your Photo / Business Photo | Kanchipuram<br>காஞ்சிபுரம்<br>Your Photo / Business Photo | Kanyakumari<br>கன்னியாகுமரி<br>Your Photo / Business Photo | Karur<br>கரூர்<br>க.செங்குட்டுவன்<br>Valluvar Science and Management College |
| Krishnagiri<br>கிருஷ்ணகிரி<br>Your Photo / Business Photo | Madurai<br>மதுரை<br>Your Photo / Business Photo | Mayiladuthurai<br>மயிலாடுதுறை<br>JENIFER SWEETS & BAKERY<br>ஜெனிபர் பவுல்ராஜ் | Nagappattinam<br>நாகப்பட்டினம்<br>Your Photo / Business Photo |
| Namakkal<br>நாமக்கல்<br>Your Photo / Business Photo | Perambalur<br>பெரம்பலூர்<br>Your Photo / Business Photo | Pudukkottai<br>புதுக்கோட்டை | Ramanathapuram<br>இராமநாதபுரம்<br>Your Photo / Business Photo |
| Ranipet<br>இராணிப்பேட்டை<br>Your Photo / Business Photo | Salem<br>சேலம்<br>தங்கராசு பெரியசாமி | Sivagangai<br>சிவகங்கை<br>Your Photo / Business Photo | Tenkasi<br>தென்காசி<br>Your Photo / Business Photo |
| Thanjavur<br>தஞ்சாவூர்<br>Your Photo / Business Photo | The Nilgiris<br>நீலகிரி<br>Your Photo / Business Photo | Theni<br>தேனி<br>Your Photo / Business Photo | Thirupattur<br>திருப்பத்தூர்<br>Your Photo / Business Photo |

| | | | |
|---|---|---|---|
| Tiruvallur<br>திருவள்ளூர்<br>Your Photo / Business Photo | Tiruvannamalai<br>திருவண்ணாமலை<br>Your Photo / Business Photo | Tiruvarur<br>திருவாரூர்<br>திரு.இளங்கோ, சிங்கப்பூர் | Vellore<br>வேலூர்<br>Your Photo / Business Photo |
| Viluppuram<br>விழுப்புரம்<br>Your Photo / Business Photo | Virudhunagar<br>விருதுநகர்<br>Your Photo / Business Photo | Pondicherry<br>புதுச்சேரி<br>தலைவர், புதுவைத் தமிழ்ச்சங்கம் | Karaikkal<br>காரைக்கால்<br>Your Photo / Business Photo |



# வள்ளுவமும் வலைத்தமிழும்

வலைத்தமிழ் தனித்து அல்லது பிற அமைப்புகளுடன் இணைந்து முன்னெடுத்துள்ள திருக்குறள் சார்ந்த 24 பரவலாக்கல் திட்டங்களை ஒரே இடத்தில் காண: **www.Thirukkural.ValaiTamil.com**

# திருக்குறள் நூல்கள் வழங்கிய மாவட்டங்களின் விவரம்

**மாவட்டங்களுக்கு சுமார் 1000 திருக்குறள் நூல்கள் வரை அனுப்பப்பட்டு மாவட்ட அரசு நிர்வாகத்துடன் இணைந்து வழங்கப்பட்டது.**

| எண் | மாவட்டம் | நூல் வழங்கப்பட்டதா? | பயிற்சியாளர் |
|---|---|---|---|
| 1 | *Dharmapuri* தர்மபுரி | ஆம் | |
| 2 | *Tiruvallur* திருவள்ளூர் | ஆம் | |
| 3 | *Tirunelveli* திருநெல்வேலி | ஆம் | |
| 4 | *Tiruvannamalai* திருவண்ணாமலை | ஆம் | திரு.க.காமராசு |
| 5 | *Kallakurichi* கள்ளக்குறிச்சி | ஆம் | புலவர். ஐயா மோகன் |
| 6 | *Cuddalore* கடலூர் | ஆம் | |
| 7 | *Chennai* சென்னை | ஆம் | திரு. க.கோ.பழனி |
| 8 | *Dindigul* திண்டுக்கல் | ஆம் | திரு. வெ.செல்வன் |
| 9 | *Karur* கரூர் | ஆம் | |
| 10 | *Mayiladuthurai* - மயிலாடுதுறை | ஆம் | |
| 11 | *Thanjavur* தஞ்சாவூர் | ஆம் | திரு. கோபிசிங், திருமதி. ச.ஆனந்தி |
| 12 | *Namakkal* நாமக்கல் | ஆம் | முனைவர். திருமலை ராஜா |
| 13 | *Pondicherry* - புதுச்சேரி | ஆம் | திருமதி. சங்கீதா கண்ணன் |
| 14 | *Vellore* வேலூர் | ஆம் | |
| 15 | *Viluppuram* விழுப்புரம் | ஆம் | |
| 16 | *Kanyakumari* கன்னியாகுமரி | ஆம் | கவிஞர். தமிழ்க்குழவி |
| 17 | *Tiruchirappalli* திருச்சி | ஆம் | |
| 18 | *Tenkasi* தென்காசி | ஆம் | திரு.ஶ்ரீதர் |
| 19 | *Pudukkottai* புதுக்கோட்டை | ஆம் | |
| 20 | *Salem* சேலம் | ஆம் | திரு. க.காமராசு |
| 21 | *Thirupattur* திருப்பத்தூர் | ஆம் | |
| 22 | *Perambalur* பெரம்பலூர் | ஆம் | |
| 23 | *Ariyalur* அரியலூர் | ஆம் | |
| 24 | *The Nilgiris* நீலகிரி | ஆம் | |
| 25 | *Tiruvarur* திருவாரூர் | அனுப்பப்பட்டது | |
| 26 | *Madurai* மதுரை | ஆம் | |
| 27 | *Nagappattinam* நாகப்பட்டினம் | அனுப்பப்பட்டது | |
| 28 | *Ramanathapuram* இராமநாதபுரம் | அனுப்பப்பட்டது | |
| 29 | *Chengalpattu* செங்கல்பட்டு | ஆம் | திரு. த.தமிழ்மகிழ்நன், திருமதி. கற்பகவள்ளி, திருமதி.சிந்தாமணி |
| 30 | *Coimbatore* கோயம்புத்தூர் | அனுப்பப்பட்டது | |
| 31 | *Tiruppur* திருப்பூர் | அனுப்பப்பட்டது | |
| 32 | *Kanchipuram* காஞ்சிபுரம் | ஆம் | திரு. குறள்அமிழ்தன், |
| 33 | *Virudhunagar* விருதுநகர் | ஆம் | |
| 34 | *Theni* தேனி | ஆம் | |
| 35 | *Erode* ஈரோடு | அனுப்பப்பட்டது | |
| 36 | *Sivagangai* சிவகங்கை | ஆம் | திரு. செயம்கொண்டான் |
| 37 | *Ranipet* இராணிப்பேட்டை | அனுப்பப்பட்டது | |
| 38 | *Thoothukudi* தூத்துக்குடி | அனுப்பப்பட்டது | |
| 39 | *Krishnagiri* கிருஷ்ணகிரி | அனுப்பப்பட்டது | |
| 40 | *Karaikal* -காரைக்கால் | இல்லை | |

# திருக்குறள் புரவலர்களுக்கு நன்றி...

உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்திற்கு ஒரு தமிழ் பேராசிரியரை தொடக்கத்தில் பகுதி நேரமாகவும், தேவையானால் முழு நேரமாகவும் வழங்கி, "குறள் வழி" திருக்குறள் மாத இதழ் அட்டைப்பட விளம்பரமாக மாதம் ரூபாய் **10000** வழங்கி ஆதரவு அளிக்கும் வள்ளுவர் அறிவியல் மற்றும் மேலாண்மைக் கல்லூரிக்கும், அதன் தாளாளர் திரு.செங்குட்டுவன் அவர்களுக்கும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக மனமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.






இவ்விதழ் மாவட்ட ஒருங்கிணைப்பாளர்கள், பயிற்சியாளர்களுக்கு அச்சுப்பிரதியாக இலவசமாக சென்று சேரவேண்டும் என்று புரவலராக தன்னை இணைத்துக்கொண்ட நாமக்கல் நண்பர் திரு.கதிரவன் செழியன் அவர்களுக்கு உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கத்தின் சார்பாக நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நன்றி... நன்றி...



## இதுவரை உலக அளவில் திருக்குறளை முழுமையாகப் படித்து முற்றோதல் செய்துள்ளவர்கள் யார்? ஆவணப்படுத்த புதிய இணையதளம்..

2000 வது ஆண்டில் திருக்குறள் முற்றோதல் செய்யும் மாணவர்களுக்கு பரிசுத் தொகை வழங்கும் திட்டத்தை அரசு தொடங்கியது. கடந்த 23 ஆண்டுகளில் தமிழ்நாடு முழுதும் சுமார் 812 பேர் 1330 திருக்குறளையும் கூறி பரிசு பெற்றுள்ளார்கள் என்று தமிழ் வளர்ச்சித்துறை இயக்குநர் முனைவர்.அவ்வை அருள் தெரிவித்துள்ளார். 14.04.1972 முதல் இயங்கிவரும் திருச்சி திருமூலநாதன் அறக்கட்டளை 01.05.1998 முதல் 26 ஆண்டுகளாக திருக்குறள் ஒப்பிடுதல் போட்டியை நடத்திவருகிறது. அவர்கள் வழங்கும் 2000 ருபாய் பரிசைப் பெற்றவர்கள் 400 பேருக்கு மேல் உள்ளனர். இதுபோல் வேறு அமைப்புகளும் செய்துகொண்டிருக்கலாம். அமெரிக்கா உள்ளிட்ட வெளிநாடுகளில் முற்றோதல் செய்தவர்கள் பலர் உள்ளனர்.

இவர்களை ஒரு குழுமமாக தொகுத்து வெளியிடுவதும், இவர்களுக்கு அனைத்திலும் தமிழ்ச்சமூகம் கல்வி, வேலைவாய்ப்பு, மேடைவாய்ப்பு, பொருளாதார வாய்ப்பு, தொழில் உள்ளிட்ட அனைத்திலும் முன்னுரிமை வழங்கவும் உலகத் திருக்குறள் முற்றோதல் இயக்கம் ஒரு சிறப்பு இணையதள வசதியை ஏற்படுத்தி ஆவணப்படுத்தி வெளியிடுகிறது. உங்களுக்குத் தெரிந்தவர்களை பதிவு செய்ய இங்கு செய்யவும்.

முதல்கட்டமாக இவர்கள் அனைவர்க்கும் உலகத்திருக்குறள் முற்றோதல் இயக்கம் சார்பில் திருக்குறள்-இளநிலை சான்றிதழ் வழங்கி, பொருள் உணர்ந்து படித்துள்ளவர்களை அடையாளம் கண்டு திருக்குறள்-முதுநிலை சான்றிதழ் வழங்கவிருக்கிறோம். இளநிலை முடித்தவர்கள், முதுநிலை படிக்க ஊக்குவிக்கப்படுகிறார்கள்.

https://www.valaitamil.com/mutrothal-students-register-list.php

or www.Thirukkural.ValaiTamil.com

**திருக்குறள் முற்றோதல் முடித்தவர்கள்**

மாணவர் பெயர் | நாடு: Select | மாநிலம்: Select | SEARCH

பதிவு செய்ய

| # | மாணவர் எண் | பெயர் | நாடு | மாநிலம் | மாவட்டம் | ஆண்டு |
|---|---|---|---|---|---|---|
| 1. | 331 | ச.கோபிகா | India | Tamil Nadu | tiruchirappalli | 2022 |
| 2. | 330 | மு. நிஷார்னியா | India | Tamil Nadu | thanjavur | 2022 |
| 3. | 329 | க. சந்தான லட்சுமி | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 4. | 328 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 5. | 327 | சு.சுசாந்திகா | India | Tamil Nadu | viluppuram | 2015 |
| 6. | 326 | ர. செஞ்சோலை | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 7. | 325 | ஸ்ரீ .ஸ்ரீ வர்ஷன் | India | Tamil Nadu | nagapattinam | 2022 |
| 8. | 324 | சீ. யாழ்த்தமிழ் | India | Tamil Nadu | viluppuram | 2022 |
| 9. | 323 | டே.ஜான் டேவிட் | India | Tamil Nadu | kanyakumari | 2022 |
| 10. | 322 | இரா.ராஜ்குமார் | India | Tamil Nadu | theni | 2015 |



# திருக்குறள் மொழிபெயர்ப்புகள் குறித்த முழு கள ஆய்வு
## - திருக்குறள் வரலாற்றில் முதன் முறையாக

- திருக்குறள் உலக அளவில் இதுவரை எத்தனை மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது என்பது குறித்து ஆய்வு செய்யப்பட்டுள்ளதா? - இல்லை
- இந்திய மொழிகள், பிற உலக மொழிகளில் திருக்குறள் மொழிபெயர்ப்பு விவரங்கள் இதுவரை தொகுக்கப்பட்டு நம்பகமான தரவுகளுடன் வெளியிடப்பட்டுள்ளதா? - இல்லை
- யுனெசுகோவில் திருக்குறளை அங்கீகாரம் செய்யக் கோரிக்கைவைக்கும் நிலையில், யுனெசுகோ உறுப்பினர் நாடுகளின் மொழிகளில் திருக்குறள் வெளிவந்துள்ள விவரங்களைக் கேட்டால் சரியான தகவல்களை வழங்க நம்மிடம் முழு தகவல் நம்பகமாக உள்ளதா? - இல்லை
- உலக அளவில் இன்னும் மொழிபெயர்க்கப்படவேண்டிய விவரங்கள் குறித்து எங்காவது ஆய்வு நடந்துள்ளதா? - இல்லை
- குறிப்பிட்ட மொழிபெயர்ப்பு எங்கு கிடைக்கும் என்று தகவல் இதுவரை தொகுக்கப்பட்டுள்ளதா? - இல்லை
- திருக்குறள் மொழிபெயர்ப்பு அச்சு நூல்கள் முழுமையாக இதுவரை உலக அளவில் தொகுக்கப்பட்டுள்ளதா? - இல்லை
- திருக்குறளில் இதுவரை தொகுக்கப்படாத, ஆய்வுசெய்யப்படாத திருக்குறள் மொழிபெயர்ப்பு குறித்த ஒரு மிக முக்கியமான செயல்பாடு 2018-ல் தொடங்கி 2023-ல் முடிந்த ஆய்வின் இறுதி அறிக்கை **"Thirukkural Translations in World Languages"** என்ற நூலாக வெளிவருகிறது. மேலே உள்ள அனைத்து கேள்விகளுக்கும் இனி இல்லை என்று சொல்லவேண்டியதில்லை, ஆம் என்று நம்பிக்கையாகக் கூறலாம். பிப்ரவரி 11, சென்னையில் நடைபெறும் திருக்குறள் ஐம்பெரும் விழாவில் இந்நூல் வெளியிடப்படவிருக்கிறது. தவறாமல் கலந்துகொள்ளுங்கள்.




**பதிவு செய்ய:** *https://www.globaltamilevents.com/thirukkural-vizha-2024-tview1223.html*









## குறள் சொல்வோம்..!
## குறள் வழி வாழ்வோம்..!







# மாணவ- மாணவியர்களுக்கு ஓர் இனிய செய்தி

## 2024-2025 ஆம் கல்வியாண்டில் நமது வள்ளுவர் கல்லூரியில் சேரும் மாணவ மாணவியர்களுக்கு

## மூன்றாண்டுகளுக்கும் இலவசக் கல்வி!

- 500 திருக்குறள்களை ஒப்புவித்தால் ஒரு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1000 திருக்குறள்களை ஒப்புவித்தால் இரண்டு வருடம் கல்லூரிக் கட்டணம் இலவசம்.
- 1330 திருக்குறள்களை ஒப்புவித்தால் மூன்றாண்டும் கல்லூரிக் கட்டணம் இலவசம்.

## COURSES OFFERED

**UNDER GRADUATE PROGRAMMES:**

- B.A. English
- B.A. Tamil
- B.A. Public Administration
- BBA
- B.Com
- B.Com. (Computer Applications)
- B.Com. (Professional Accounting)
- BCA
- B.Sc. Computer Science
- B.Sc. Fashion Technology & Costume Designing
- B.Sc. Hotel Management & Catering Science
- B.Sc. Mathematics
- B.Sc. Physics

**POST GRADUATE PROGRAMMES:**

- M.A. English
- M.Com. (Computer Applications)
- M.Sc. Computer Science
- M.Sc. Mathematics

**RESEARCH PROGRAMMES:**

- M.Phil. Commerce
- Ph.D. Commerce

**DIPLOMA COURSES:**

- Diploma in Food Production
- Diploma in Banking & Finance

**PROFESSIONAL PROGRAMME**

- M.B.A




@ valluvarcollege @VCSM Events www.vcsm.ac.in 9944450507 / 9791726481 / 9791736481